रामेण दशरथमूर्च्छापनयनम्—

जितः प्रयातो जमदग्निसूनुः
निश्चेष्टितं मूर्च्छिततातवर्यम् ।
नत्वा पुरस्तादनघः स रामः
दुःखाम्बुधेः पारममुं निनाय ॥ 17

श्रीरामेण वैष्णवधनुषो वरुणायार्पणम्—

प्रसूनवर्षार्थमिहागतेषु
देवेषु दृष्ट्वा वरुणं स रामः ।
दत्वा धनुः "रक्ष तदि" त्युदीर्य
ययावयोध्यां वृतसैन्यराशिः ॥ 18

दशरथेन केकयदेशं प्रति भरतप्रेषणम्—

मातामहस्ते जगतां प्रशास्ता
त्वां द्रष्टुकामो भरत ! त्वमद्य ।
तं केकयं शङ्खसमृद्धिमन्तं
गच्छेति साकेतनृपोऽब्रवीत्तम् ॥ 19

कविवाक्यम्—

ततः प्रयाते भरते त्वयोध्या-
पतौ तदा शासति राज्यमेतत् ।
देवैः कृतानन्ततपोमहिम्ना
ततो यदाऽऽसीत् तदिदं वदामः ॥ 20

इति कम्बरामायण-संस्कृतानुवादे बालकाण्डः
समाप्तः ॥

# கம்பராமாயணம்



## பாலகாண்டம்



### தற்சிறப்புப்பாயிரம்

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணுங்களே. 1

நொய்தி னொய்யசொ னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்தொளை
எய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே. 2

**இதுவும், அடுத்த கவியும் - நூல்வரலாறு.**

தேவ பாடையி னிக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி னுனுரை யின்படி நான்றமிழ்ப்
பாவி னலிதுணர்த்திய பண்பரோ. 3

நடையி னின்றுயர் நாயகன் றோற்றத்தி
னிடைநி கழ்ந்தவி ராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே. 4

**நூற்பயன்**

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு
முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்

நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே. 5

# 1. ஆற்றுப்படலம்

ஆச லம்புரி யைம்பொறி வாளியும்
காச லம்பு முலையவர் கண்ணெனும்
பூச லம்பு நெறியின் புறஞ்செலாக்
கோச லம்புனை யாற்றணி கூறுவாம். 1

## சரயூநதியின் சிறப்பு.

இரவி தன்குலத் தெண்ணில்பல் வேந்தர்தம்
புரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு வென்பது தாய்முலை யன்னதிவ்
வுரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம். 2

எயினர்வாழ் சீறூ ரப்பு மாரியி னிரியல் போக்கி
வயின்வயி னெயிற்றி மாதர் வயிறலைத் தோடவோட்டி
அயின்முகக் கணையும்வில்லும் வாரிகொண் டலைக்குநீரால்
செயிர்தருங் கொற்ற மன்னர் சேனையை மாலுமன்றே. 3

## சரயுவெள்ளம் பலநிலையை யடைதல்.

கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலு மியம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையி லொன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்த தன்றே. 4

## பிரிந்த அவ்வெள்ளம் பலவிடத்தும் பாய்தல்

தாதுகு சோலை தோறும் சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும் புதுமணத் தடங்க டோறும்
மாதவி வேலிப் பூக வனந்தொறும் வயல்க டோறும்
ஓதிய வுடம்பு தோறு முயிரென வுலாய தன்றே. 5

# 2. நாட்டுப்படலம்

## கவிக்கூற்று

வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி யென்பான்
தீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச் செய்தான்

ஆங்கவன் புகழ்ந்த நாட்டை யன்பெனு நறவ மாந்தி
மூங்கையான் பேச லுற்று னென்னயான் மொழிய
லுற்றேன். 1

## எருமைகளின் பாலால் செந்நெல் வளர்த்தல்.

ஈர நீர்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வருங்கரு மேதிகள்
ஊரி னின்றகன் றுள்ளிட மென்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே. 2

## விருந்தோம்பலும், ஈகையும்

பெருந்த டங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே. 3

## குடிகட்கு உள்ள நிதியம் முதலியன.

கலஞ்சு ரக்கு நிதியங் கணக்கிலா
நிலஞ்சு ரக்கு நிறைவள நன்மணி
பிலஞ்சு ரக்கும் பெறுதற் கரியதம்
குலஞ்சு ரக்கு மொழுக்கங் குடிக்கெலாம். 4

## அந்நாட்டிற் கூற்றம் முதலியன இல்லாமை.

கூற்ற மில்லையோர் குற்றமி லாமையால்
சீற்ற மில்லைதஞ் சிந்தையிற் செம்மையால்
ஆற்ற நல்லற மல்ல திலாமையால்
ஏற்ற மன்றி யிழித்தக வில்லையே. 5

## பல்வகைப் புகைகள்

அகிலி டும்புகை யட்டி லிடும்புகை
நகலி ஞலை நறும்புகை நான்மறை
புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்
முகிலின் விம்மி முயங்கின வெங்கணும். 6

## மகளிரின் விழி முதலியன.

விதியினை நகுவன வயில்விழி பிடியின்
கதியினை நகுவன வவர்நடை கமலப்

பொதியினை நகுவன புணர்முலை கலை வாழ்
மதியினை நகுவன வனிதையர் வதனம். 7

### சோலை நெற்போர் நீர் நிலைகள் ஊர் என்ற இவற்றின் வருணனை

காரொடு நிகர்வன கடிபொழில் கழனிப்
போரொடு நிகர்வன பொலன்வரை யணைசூழ்
நீரொடு நிகர்வன நிறைகட னிதிசால்
ஊரொடு நிகர்வன விமையவ ருலகம் 8

### அந்நாட்டில் வறுமை முதலியன இல்லாமைக்குக் காரணம்

வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
ஒண்மை யில்லைபல் கேள்வி யோங்கலால். 9

### ஆடவர் மகளிர் என்பவரின் பொலிவுமுதலியன.

பொற்பி னின்றன பொலிவு பொய்யிலா
நிற்பி னின்றன நீதி மாதரார்
அற்பி னின்றன வறங்க லன்னவர்
கற்பி னின்றன கால மாரியே. 10

### கோசலதேசத்தின் பரப்பு.

சோலை மாநிலந் துருவி யாவரே
வேலை கண்டுதா மீள வல்லவர்
சாலும் வார்புனற் சரயு வும்பல
காலி னோடியுங் கண்ட தில்லையே 11

### நாட்டின் சிறப்பும் மேற்படலத்தின் தோற்றுவாயும்.

வீடு சேரநீர் வேலை கான்மடுத்து
ஊடு பேரினு முலைவி லாநலம்
கூடு கோசல மென்னுங் கோதிலா
நாடு கூறினு நகரங் கூறுவாம். 12

# 3. நகரப்படலம்

## இதுமுதல் அயோத்திமாநகரத்தின் சிறப்பு

செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூறிய
தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன் முனிவரும் புகழ்ந்தது
வரம்பில்
எவ்வுல கத்தோ ரியாவருந் தவஞ்செய் தேறுவா னுதரிக்
கின்ற
அவ்வுல கத்தோ ரிழிவதற் கருத்தி புரிகின்ற தயோத்
திமா நகரம். 1

உமைக்கொருபாகத் தொருவனுமிருவர்க் கொருதனிக்
கொழுநனு மலர்மேல்
கமைப் பெருஞ்செல்வக் கடவுளு முவமை கண்டில
ரங்கது காண்பான்
அமைப்பருங் காத லதுபிடித் துந்த வந்தரஞ் சந்திரா
தித்தர்
இமைப்பிலர் திரிவ ரதுவலா லிதனுக் கியம்பலா மேதுமற்
றியாதோ. 2

புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் பொருளே, மண்ணிடை யாவ ரிராகவ னன்றி மாதவ மறத்தொடும் வளர்த்தார், எண்ணருங் குணத்தி னவனினி திருந்திவ் வேழுல காளிட மென்றால் ஒண்ணுமோ விதனின் வேறொரு போக வுறைவிட முண்டென வுரைத்தல். 3

## அந்நகரத்து மதிலின் வருணனை.

பூணினும் புகழே யமையுமென் றினைய பொற்பினின்
றுயிர் நனிபுரக்கும்
யாணரெண் டிசைக்கு மிருளற விமைக்கு மிரவிதன் குல
முத னிருபர்
சேனையுங் கடந்து திசையையுங் கடந்து திகிரியுஞ்
செந்தனிக் கோலும்
ஆணையுங் காக்கு மாயினந் நகருக் கணியென வியற்றிய
தன்றே. 4

## அகழியின் சிறப்பு

ஏகுகின்ற தன் கணங்க ளோடுமெல்லை காண்கிலா
நாகமொன் றகன்கிடங்கை நாமவேலை யாமெனு

மேகமொண்டு கொண்டெழுந்து விண்டொடர்ந்த குன்றமென்று
ஆகநொந்து நின்றுதாரை யம்மதிற்கண் வீசுமே. 5

அந்தமா மதிற்புறத் தகத்தெழுந் தலர்ந்தநீள்
கந்தநாறு பங்கயத்த கானமான மாதரார்
முந்துவாண் முகங்களுக் குடைந்து போனமொய்ம் பெலாம்
வந்துபோர் மலைக்கமா மதில் வளைத்த மானுமே. 6

## அந்நகரத்து மாளிகைகளின் வருணனை.

திங்களுங் கரிதென வெண்மை தீற்றிய
சங்கவெண் சுதை யுடைத் தவள மாளிகை
வெங்கடுங் கால்பொர மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடற் றரங்கம் போலுமே. 7

## கொடிகளின் சிறப்பு

காண்வரு நெடுவரைக் கதலிக் கானம் போற்
கோணிமிர் பதாகையின் குழாந் தழைத்தன
வாணனி மழுங்கிட மடங்கி வைகலும்
சேண்மதி தேய்வதக் கொடிக டேய்க்கவே. 8

## அந்நகரின் பலவகை வளங்கள்

மின்னென விளக்கென வெயிற்பி ழம்பெனத்
துன்னிய தமனியத் தொழிற றைத்தவக்
கன்னிநன் னகர்நிழல் கதுவ லாலரோ
பொன்னுல காயதப் புலவர் வானமே. 9

பொழுதுணர் வரியவப் பொருவின் மாநகர்த்
தொழுதகை மடந்தையர் சுடர்விளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கு மாசைகொல்
எழுதுசித் திரங்களு மிமைப்பி லாதவே. 10

ஊடவுங் கூடவு முயிரி னின்னிசை
பாடவும் விறலியர் பாடல் கேட்கவும்
ஆடவு மகன்புன லாடி யம்மலர்
சூடவும் பொழுதுபோஞ் சிலர்க்கத் தொன்னகர். 11

முழங்குதிண் கடகரி மொய்ம்பி னூரவும்
பழுங்குரத் திவுளியொ டிரத மேறவும்
எழங்கணொ டிரந்தவர் பரிவு தீர்தர
வழங்கவும் பொழுதுபோஞ் சிலர்க்கம் மாநகர். 12

கரியொடு கரியெதிர் பொருத்திக் கைப்படை
வரிசிலை முதலிய வழங்கி வாளுனைப்
புரவியிற் பொருவில்செண் டாடிப் போர்க்கலை
தெரிதலிற் பொழுதுபோஞ் சிலர்க்கச் சேனைகர். 13

நாளு விதமா நளிமாதிர வீதி யோடி
மீளுறு வேலைப் புனல்வெண்முகி லுண்ணுமாபோல்
ஆளுத மாடத் திடையாடு கொடிக்கண மீப்போய்
வாளுறு நண்ணிப் புனல்வற்றிட நக்கு மன்னோ. 14

தெள்வார் மழையுந் திரையாழியு முட்க நாளும்
வள்வார் முரசம் மதிர்மாநகர் வாழு மாக்கள்
கள்வா ரிலாமைப் பொருட் காவலு மில்லை யாதும்
கொள்வா ரிலாமைக் கொடுப்பவர்களு மில்லை மாதோ 15

கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற
வல்லாரு மில்லை யவைவல்லரல் லாரு மில்லை
எல்லாரு மெல்லாப் பெருஞ்செல்வமு மெய்த லாலே
இல்லாரு மில்லை யுடையார்களு மில்லை மாதோ. 16

ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந் தெண்ணில் கேள்வி
ஆகம் முதற்றிண் பணைபோக்கி யருந்த வத்தின்
சாகந் தழைத்தன் பரும்பித் தருமம் மலர்ந்து
போகங் கனியொன்று பழுத்தது போலு மன்றே. 17

## 4. அரசியற்படலம்

### அந்நகர்க்கு அரசன் ஒருவன் உளனென்பது.

அம்மா ணகருக் கரசன் னரசர்க் கரசன்
செம்மாண் டனிக்கோ லுலகேழினுஞ் செல்லநின்றான்
இம்மாண் கதைக்கோ ரிறையாய விராம னென்னும்
மொய்ம்மாண் கழலோற் றருநல்லற மூர்த்தி யன்னான். 1

### அவனுடைய சிறப்பு

மொய்யார் கலிசூழ் முதுபாரின் முகந்து தானக்
கையார் புனலா னனையாதன கையு மில்லை
மெய்யாய வேதத் துறைவேந்தருக் கேய்ந்த யாரும்
செய்யாத யாகம் மிவன்செய்து முடித்த மாதோ. 2

### தசரதசக்கரவர்த்தியின் பாதுகாத்தற் சிறப்பு.

வயிரவான் பூணணி மடங்கல் மொய்ம்பினான்
உயிரெலாந் தன்னுயி ரொப்ப வோம்பலால்

செயிரிலா வுலகினிற் சென்று நின்றுவாழ்
உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினான். 3

## தசரதன் உலகமுழுவதையும் கருத்தோடு பாதுகாத்தல்

எய்யென வெழுபகை யெங்கு மின்மையான்
மொய்பெருத் தினவுறு முழவுத் தோளினான்
வையக முழுவதும் வறிஞ னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான். 4

# 5. திருவவதாரப்படலம்.

## தசரதன் புத்திரர் பிறவாக் குறையை வசிட்டனிடம் சொல்லுதல்.

ஆயவ னொருபக லயனை யேநிகர்
தூயமா முனிவரர் றொழுது தொல்குலத்
தாயருந் தந்தையுந் தவமு மன்பினான்
மேயவான் கடவுளும் பிறவும் வேறுநீ. 1

அருந்தவ முனிவரு மந்த ணாளரும்
வருந்துத லின்றியே வாழ்வின் வைகினார்
இருந்துய ருழக்குவ ரெற்பி னென்பதோர்
அருந்துயர் வருத்துமென் னகத்தை யென்றனன். 2

## அமரர்க்குத் திருமால் கூறியருளிய வார்த்தையை வசிட்டன் நினைத்தலைத் தெரிவிக்கும்.

முரசறை செழுங்கடை முத்த மாமுடி
அரசர்தங் கோமக னனைய கூறலும்
விரைசெறி கமலமென் பொகுட்டு மேவிய
வரசரோ ருகன் மகன் மனத்தி னெண்ணினான். 3
அலைகட னடுவணோ ரனந்தன் மீமிசை
மலையென விழிதுயில் வளரு மாமுகில்
கொலைதொழி லரக்கர்தங் கொடுமை தீர்ப்பனென்று
உலைவுறு மமரருக் குரைத்த வாய்மையை. 4

## வசிட்டன் முன்னைய நிகழ்ச்சியை மனத்தில்நினைந்து தசரதனைநோக்கி யாகஞ்செய்யின் குறைதீருமெனல்.

ஈதுமுன் னிகழ்ந்த வண்ண மெனமுனி யிதயத் தெண்ணி
மாதிரம் பொருத திண்டோண் மன்ன நீ வருந்த
லேழ்

பூதல முழுதுங் காக்கும் புதல்வரை யளிக்கும் வேள்வி
தீதற முயலி னைய சிந்தைநோய் தீரு மென்றான். 5

பாந்தளின் மகுடகோடி பரித்தபா ரதனில் வைகும்
மாந்தரை விலங்கென் றுன்னு மனத்தனன்
மாதவத்தனெண்ணின்
பூந்தவி சுகந்து ளோனும் புராரியும் புகழ்தற்கொத்த
சாந்தனல் வேள்வி முற்றில்தனயர்களுளரா மென்றான். 6

## ஓமாக்கியினின்று பூதமொன்று சுதைப்பிண்டமேந்தி யெழுதல்.

ஆயிடைக் கனலினின் றம்பொற் றட்டமீத்
தூயநற் சுதைநிகர் பிண்ட மொன்றுசூழ்
தீயெரிப் பங்கியுஞ் சிவந்த கண்ணுமாய்
ஏயெனப் பூதமொன் றெழுந்த தேந்தியே. 7

## மன்னவன் கௌசலைக்கு முதலில் அந்தச் சுதையைத் தருதல்.

மாமுனி யருள்வழி மன்னர் மன்னவன்
தூமமென் சுரிகுழல் தொண்டைத் தூயவாய்க்
காமரொண் கௌசலை கரத்தி னேர்பகிர்
தாமுற வளித்தனன் சங்க மார்த்தெழ. 8

## கைகேயிக்குச் சுதையளித்தல்.

கைகயன் றனயைதன் கரத்தும் அம்முறைச்
செய்கையி னளித்தனன் தேவ ரார்த்தெழப்
பொய்கையும் நதிகளும் பொழிலு மோதிமம்
வைகுறு கோசல மன்னர் மன்னனே. 9

## சுமித்திரைக்குச் சுதை யளித்தல்

நமித்திரர் நடுக்குறு நலங்கொண் மொய்ம்புடை
நிமித்திரு மரபுளான் முன்னர் நீர்மையின்
சுமித்திரைக் களித்தனன் சுரர்க்கு வேந்தினிச்
சமித்ததென் பகையெனத் தமரொ டார்ப்பவே. 10

## சுமித்திரைக்குப் பின்னும் எஞ்சியதை யளித்தல்.

பின்னுமப் பெருந்தகை பிதிர்ந்து வீழ்ந்தது
தன்னையுஞ் சுமித்திரை தனக்கு நல்கினான்
ஒன்னலர்க் கிடமும்வே றுலகி னேங்கிய
மன்னுயிர் தமக்குநீள் வலமுந் துள்ளவே. 11

## ஸ்ரீராமாவதாரம்

ஆயிடைப் பருவம்வந் தடைந்த வெல்லையின்
மாயிரு புவிமகண் மகிழ்வி னோங்கிட
வேய்புனர் பூசமும் விண்ணு ளோர்புகழ்
தூயகர்க் கடகமு மெழுந்து துள்ளவே. 12

ஒருபக லுலகெலா முதரத் துட்பொதிந்து
அருமறைக் குணர்வரு மவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை. 13

## கைகேயி பரதனைப் பெறுதல்.

ஆசையும் விசும்புநின் றமர ரார்த்தெழ
வாசவன் முதலினோர் வணங்கி வாழ்த்துறப்
பூசமு மீனமும் பொலிய நல்கினள்
மாசறு கேகயன் மாது மைந்தனை. 14

## சுமித்திரை இலக்குவனைப் பெறுதல்.

தனையவிழ் தருவுடைச் சயில கோபனும்
கிளையுமந் தரமிசைக் கெழுமி யார்த்தெழ
அளைபுகு மரவினோ டலவன் வாழ்வுற
இளையவற் பயந்தன ளிளைய மென்கொடி. 15

## சுமித்திரை சத்துருக்கினனைப் பெறுதல்.

படங்கிளர் பஃறலைப் பாந்த ளேந்துபார்
நடங்கிளர் தரமறை நவில நாடகம்
மடங்கலு மகமுமே வாழ்வி னோங்கிட
விடங்கிளர் விழியினண் மீண்டு மீன்றனள். 16

## புத்திரர் பிறந்ததைப் பாங்கிமார் அரசனுக்குத் தெரிவிக்க, சோதிடர் நாள் முதலியவை நன்றெனல்.

ஓடின ராசன்மாட் டுவகை கூறிநின்று
ஆடினர் சிலதிய ரந்த ணாளர்கள்
கூடினர் நாளொடு கோளு நின்றமை
நாடின ருலகினி நவையின் றென்றனர். 17

## முறையே புதல்வர்நால்வர்க்கும் வசிட்டன் நாமகரணஞ் செய்தல்

கராமலேயத் தளர் கைக்கரி யெய்த்தே
அராவணை யில்துயில் வோயென வந்தாள்
விராவி யளித்தருண் மெய்ப்பொரு ளுக்கே
இராம னெனப்பெய ரீந்தன னன்றே. 18

கரதல முற்றௌளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப்பொருண் மெய்ந்நெறி கண்ட
வரத னுதித்திடு மற்றைய வொளியைப்
பரத னெனப்பெயர் பன்னின னன்றே. 19

உலக்குநர் வஞ்சக ரும்பரு முய்ந்தார்
நிலக்கொடி யுந்துயர் நீத்தன ளிந்த
விலக்கரு மொம்பின் விளக்கொளி நாமம்
இலக்குவ னென்ன விசைந்தன னன்றே. 20

முத்துருக் கொண்டுசெம் முளரி யலர்ந்தால்
ஒத்திருக் கும்மெழி லுடையவிவ் வொளியால்
எத்திருக் குங்கெடு மென்பதை யெண்ணுச்
சத்துருக் கன்னெனச் சாற்றின ளுமம். 21

## முனிவர் முதலியோர் இராமனாதியோரை யணுகியிருத்தல்

அருமறை முனிவரு மமரரு மவனித்
திருவும நகருறை செனமுந மிடரோடு
இருவினை துணிதரு மிவர்களி னிவணின்று
ஒருபொழு தகல்கில முறையென வுறுவார். 22

## புதல்வர் பகலில் முனிவர்களிடத்திற்சென்று பழகி, மாலையில் நகரத்தார் மகிழ்ச்சியோடு எதிர்கொள்ள மீளுதல்.

வீரனு மிளைஞரும் வெறிபொழில் களின்வாய்
ஈரமொ டுறைதரு முனிவர ரிடைபோய்ச்
சோர்பொழு தணிநகர் துறுகுவ ரெதிர்வார்
கார்வர வலர்பயிர் பொருவுவர் களியால். 23

## இராமன் நகரத்தவரைச் சேமம் வினவுதலும், அவர் விடையளித்து ஸ்ரீராமபிரானை வாழ்த்துதலும்.

எதிர்வரு மவர்களை யெமையுடை யிறைவன்
முதிர்தரு கருணையின் முகமல ரொளிரா
எதுவினை யிடரிலை யினிதினு மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொ லெனவே. 24

அ தைய நினையெம தரசென வுடையேம்
இஃதொரு பொருளல வெமதுயிருடனேழ்
மகிதல முழுதையு முறுகவி மலரோன்
உகுபக லளவென வுரைநனி புரிவார். 25

### தசரதன் பெருமகிழ்ச்சியடைதல்.

அரசர்தம் பெருமக னகிலம் யாவையும்
விரசுறு தனிக்குடை விளங்க வென்றிசேர்
முரசொலி கறங்கிட முனிவ ரேத்துறக்
கரை செய வரியதோர் களிப்பின் வைகுநாள். 26

## 6. *கையடைப்படலம்.*

### தசரதசக்கரவர்த்தி சபாமண்டபஞ் சேர்தல்.

நனைவரு கற்பக நாட்டு நன்னகர்
அனைவரு மணைதர வயிர்க்குஞ் சிந்தையான்
நினையவு மரியது விசும்பி னீண்டதோர்
புனை மணி மண்டபம் பொலிய வெய்தினன், 1

### அங்கு விசுவாமித்திரமுனிவன் வருதல்.

மடங்கல்போன் மொய்ம்பினன் முன்னர் மன்னுயிர்
அடங்கலு முலகும்வே றமைத்துத் தேவரோடு
இடங்கொளுன் முகனையும் படைப்ப னீண்டெனத்
தொடங்கிய துனியுறு முனிவன் தோன்றினன். 2

### கௌசிகன் தசரதனைப் புகழ்தல்.

என்னனைய முனிவரரு மிமையவரு மிடையூறொன்றுடைய ரானால்
பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும் பாற்கடலும் பதுமபீடத்
தன்னகருங் கற்பகநாட்டணிநகரு மணிமாட வயோத்தி யென்னும்
பொன்னகரு மல்லாது புகலுண்டோ இகல் கடந்த புலவுவேலோய். 3

### 'வேள்விகாத்தற்கு இராமனையனுப்புக' என்று கௌசிகன் கூறல்.

தருவனத்துள் யானியற்றுந் தகைவேள்விக் கிடையூறாத் தவஞ்செய் வோர்கள், வெருவரச்சென் றடைகாம வெகுளியென நிருதரிடை விலக்கா வண்ணஞ், செரு

முகத்துக் காத்தியென நின் சிறுவர் நால்வரினுங் கரிய செம்மல், ஒருவனைத் தந்தீதியென வுயிரிரக்குங் கொடுங் கூற்றி னுளையச் சொன்னான். 4

## தசரதன் தானே வந்து வேள்வி காப்பதாகக் கூறுதல்.

தொடை யூற்றித் தேன்றுளிக்கு நறுந்தாரா னொரு வண்ணந் துயர நீங்கிப், படையூற்ற மிலன்சிறிய னிவன் பெரியோய் பணியிது வேற் பணிநீர்க் கங்கை, புடையூற் றுஞ் சடையானும் புரந்தரனும் நான்முகனும் புகுந்து செய்யும், இடையூற்றுக் கிடையூறு யான் காப்பென் பெருவேள்விக் கெழுக வென்றான். 5

## வசிட்டன் 'இராமனை முனிவனுடன் அனுப்புக' என்றலைத் தெரிவிக்கும்.

கறுத்த மாமுனி கருத்தை யுன்னிநீ
பொறுத்தி யென்றவற் புகன்று நின்மகற்கு
உறுத்த லாகலா வுறுதி யெய்துநாள்
மறுத்தி யோவெனா வசிட்டன் கூறினான். 6

## இராமன் ஆயுதங்களை எடுத்துக்கொள்ளுதல்.

வென்றி வாள்புடை விசித்து மெய்ம்மைபோல்
என்றுந் தேய்வுறாத் தூணி யாத்திரு
குன்றம் போன்றுயர் தோளிற் கொற்றவில்
ஒன்று தாங்கினா னுலகந் தாங்கினான். 7

## இராமன் இலக்குமணனுடன் முனிவன்பின்னே செல்லுதல்.

அன்ன தம்பியுந் தானு மையனும்
மன்ன னின்னுயிர் வழிக்கொண்டாலெனச்
சொன்ன மாதவற் றொடர்ந்து சாயைபோற்
பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினான். 8

## மூவரும் சரயுநதியைச் சார்தல்.

வரங்கண் மாசறத் தவஞ்செய் தோர்கள்வாழ்
புரங்க ணேரிலா நகர நீங்கிப்போய்
அரங்கி னாடுவார் சிலம்பி னன்னநின்று
இரங்கு வார்புனற் சரயு வெய்தினார் 9

### மூவரும் ஒரு சோலையை யடைதல்.

கரும்பு கால்பொரக் கழனி வார்ந்ததேன்
வரம்பு மீறிடு மருத வேலிவாய்
அரும்பு கொங்கையா ரம்மெ லோதிபோல்
சுரும்பு வாழ்வதோர் சோலை வைகினர். 10

### உதயகாலத்தில் அவர்கள் நதியைக் கடத்தல்.

தாழு மாமழை தழுவு நெற்றியால்
சூழி யானைபோல் தோன்று மால்வரைப்
பாழி மாமுகட் டுச்சிப் பச்சைமா
ஏழு மேறப்போ யாறு மேறினர். 11

### ஒரு சோலையைக் கண்டு இராமன் 'இது யாது?' என்றல்.

தேவு மாதவற் றெழுது தேவர் தம்
நாவு ளாவுதி நயக்கும் வேள்விவாய்த்
தாவு மாபுகை தழுவு சோலைகண்டு
யாவ தீதென்று னவர்க்கு மேனின்றான். 12

## 7. தாடகைவதைப்படலம்.

### விசுவாமித்திரனது மறுமொழி.

திங்கண்மே வுஞ்சடைத் தேவன்மேன் மாரவேள்
இங்குநின் றெய்யவு மெரிதரும் நுதல்விழிப்
பொங்குகோ பஞ்சுடப் பூளை வீ யன்னதன்
அங்கம்வெந் தன்றுதொட் டனங்கனே யாயினன். 1
வாரணத் துரிவையான் மதனனைச் சினவுநாள்
ஈரமற் றங்கமிங் குகுதலா லிவணெலாம்
ஆரணத் துறையுளா யங்கநா டிதுவுமக்
காரணக் குறியுடைக் காமனாச் சிரமமே. 2

### விசுவாமித்திரன் முதலிய மூவரும் ஒருநாள் அங்குத் தங்கி மறுநாள் ஒருபாலைவனஞ் சேர்தல்.

என்றவந் தணனியம் பலும் வியந் தவ்வயின்
சென்றுவந் தெதிரெழுஞ் செந்நெறிச் செய்வரோடு
அன்றுறைந் தலர்கதிர்ப் பரிதிமண் டிலமகல்
குன்றினின் றிவரவோர் சுடுசுரங் குறுகினர். 3
படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருநா
முடியவேம் முடியமு டிருளும்வான் முகடும்வேம்
விடியுமேல் வெயிலும்வேம் மழையும்வேம் மின்னினோடு
இடியும்வே மென்னில்வே றியாவைவே வாதவே. 4

விஞ்சுவான் மழையின்மே லம்பும்வே லும்படச்
செஞ்செவே செருமுகத் தமர்செயுந் திறனிலா
வஞ்சர் தீ வினையினான் மானமா மணியிழந்து
அஞ்சினார் நெஞ்சுபோ லென்றுமா ருதரோ. 5

தாவரு மிருவினை செற்றுத் தள்ளரும்
மூவகைப் பகையரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர் மனமும் பொன்விலைப்
பாவையர் மனமும்போற் பசையு மற்றதே. 6

### வெம்மை தோன்றாமைக்காக முனிவன் அவர்கட்கு இரண்டு விஞ்சைகளை உபதேசித்தல.

நோக்கின னவர்முக நோக்க நோக்குடைக்
கோக்கும ரருமடி குறுக நான்முகன்
ஆக்கிய விஞ்சைக ளிரண்டு மவ்வழி
ஊக்கின னவையவ ருள்ளத் துள்ளினார். 7

### அப்பாலைவனம் குமாரர்கட்குக் குளிர்ந்து தோன்றுதல்

உள்ளிய காலையி னூழித் தீயையும்
எள்ளுறு கொழுங்கன லெரியும் வெஞ்சுரம்
தெள்ளு தண் புனலிடைச் சேற லொத்தது
வள்ளலு முனிவனை வணங்கிக் கூறுவான் 8

### இந்த இடம் இங்ஙனம் வெப்பமாயிருத்தற்குக் காரணம் யாது? என்று முனிவனை இராமன் வினவுதல்

சுழிபடு கங்கையந் தொங்கன் மௌளியான்
விழிபட வெந்ததோ வேறுதா னுண்டோ
பழிபடர் மன்னவன் படைத்த நாட்டினூங்கு
அழிவதென் காரண மறிஞ கூறென்றான். 9

### தாடகை வரலாறு :- முனிவன் 'ஓரரக்கியின் வரலாற்றைக் கேட்பாயாக' எனல்.

என்றலு மிராமனை நோக்கி யின்னுயிர்
கொன்றுழல் வாழ்க்கையள் கூற்றின் றோற்றத்தள்
அன்றியு மையிரு நூறு மையன்மா
ஒன்றிய வலியின ளுறுதி கேளெனா. 10

### அவளுக்கு மாரீசன் சுபாகு என்னும் இருமக்கள் தோன்றுதல்

பற்பல நாட் செலீஇப் பதுமை போன்றொளிர்
பொற்பினால் வயிற்றிடைப் புவன மேங்கிட
வெற்பணி புயத்துமா ரீச னும்விறல்
மற்பொரு சுவாகுவும் வந்து தோன்றினர். 11

### சுமாலியென்பவனோடு சுபாகுமாரீசர் உறவுகொள்ளுதல்

ஆங்கவன் வெகுளியு மறைந்த சாபமும்
தாங்கின ரெதிர்செயுந் தருக்கி லாமையின்
நீங்கினர் சுமாலியை நேர்ந்து நிற்கியாம்
ஓங்கிய புதல்வரென் றுறவு கூர்ந்தனர். 12

### இராவணன் சுபாகுமாரீசர்களை மாமன்மாரென்று பாராட்ட, அவர்கள் உலகத்தாருக்குத் தீமைபுரிதல்.

அவனொடும் பாதலத் தனேக நாட் செலீஇத்
தவனுறு தசமுகன் றனக்கு மாதுலர்
இவரெனப் புடைத்தமித் துலக மெங்கணும்
பவனனிற் றிரிகுநர் பதகி மைந்தர்கள். 13

### புதல்வரைப்பிரிந்து இங்கு அந்தத் தாடகை வசித்தல்

மிகுந்திறன் மைந்தரை வேறு நீங்குறாத்
தகுந் தொழின் முனிவரன் சலத்தை யுன்னியே
வகுந்துவின் வசுவரி வதிந்த திவ்வனம்
புகுந்தன ளழ லெனப் புழுங்கு நெஞ்சினாள். 14

### இவ்விடம் இங்ஙனமானது இவளாலேயே யெனல்.

உளப்பரும் பிணிப்பரு வுலோப மொன்றுமே
அளப்பருங் குணங்களை யழிக்கு மாறுபோல்
கிளப்பருங் கொடுமைய வரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப் பழித்து மாற்றினாள். 15

### தாடகையினால் விளையுந் தீங்குகள்

இலங்கையரசன் பணி யமைந்தொ ரிடையூறு
விலங்கல்வலி கொண்டெனது வேள்வி நலிகின்றாள்
அலங்கன் முகி லேயவ ளிவ் வங்க நில மெங்கும்
குலங்கவொ டடங்கநனி கொன்றுதிரி கின்றாள். 16

### 'அத்தாடகை வசிக்குமிடம் எது?' என்று இராமன் வினவுதல்

அங்கிறைவ னப்பரிசு ரைப்பவது கேளா
கொங்குறை நறைக் குல மலர்ச்செனி குலுக்கா
எங்குறைவ தித்தொழி லியற்றுபவ ளென்றான்
சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான். 17

### விசுவாமித்திரன் தாடகையி னுறைவிடத்தைக் காட்டுமுன் அவள் எதிர்வருதல்.

கைவரை யெனத்தகைய காளையுரை கேளா
ஐவரை யகத்திடை யடைத்தமுனி யைய
இவ்வரை யிருப்பதவ ளென்பதனின் முன்போர்
மைவரை நெருப்பெரிய வந்ததென வந்தாள். 18

### தாடகை அங்கு வருதலின் வருணனை

சிலம்புகள் சிலம்பிடை செறித்தகழ லோடும்
நிலம்புக மிதித்தன ளெளித்தகுழி வேலைச்
சலம்புக வனற்றறு கணந்தகனு மஞ்சிப்
பிலம்புக நிலைக் கிரிகள் பின்றொடர வந்தாள். 19

### தாடகை வீரவாதம் செய்தல்

கடக்கரும் வலத்தெனது காவலிதில் யாவும்
கெடக் கருவ றுத்தன னினிச்சுவை கிடக்கும்
விடக்கரி தெனக்கருதி யோ விதிகொ டுந்தப்
படக்கருதி யோபகர்மின் வந்த பரி சென்றே. 20

### பெண்ணென்று அந்தத்தாடகையை இராமன் கொல்லாதிருத்தல்.

அண்ணன்முனி வற்கதுக ருத்தெனினு மாவி
உண்ணென வடிக்கணை தொடுக்கில னுயிர்க்கே
துண்ணெனும் வினைத்தொழில் தொடங்கி யுளளேனும்
பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான். 21

### விசுவாமித்திரன் நான் ஆராய்ந்து கூறுவதால் நீ தயங்காமல் இவளைக் கொல்லலா மெனல்.

ஈறில் நல்லறம் பார்த்திசைத் தேனிவட்
சீறி நின்றிது செப்புகின் றேனலேன்
ஆறி நின்ற தருளன் றரக்கியைக்
கோறி யென்றெதி ரந்தணன் கூறினான். 22

**பிறகு இராமபாணம் தாடகையின் நெஞ்சில் ஊடுருவிச் செல்லுதல்.**

சொல்லொக்குங் கடியவேகச் சுடுசரங் கரிய செம்மல்
அல்லொக்கு நிறத்தினுண்மேல் விடுத்தலும் வயிரக் குன்றக்
கல்லொக்கு நெஞ்சில் தங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே. 23

**தாடகை இறந்துவிழுந்ததன் வருணனை**

பொடியுடைக் கான மெங்குங் குருதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை யெயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைக டோறும்
முடியுடை யரக்கற் கந்நாண் முந்தியுற் பாத மாகப்
படியிடை யற்று வீழ்ந்த வெற்றி யம்பதாகை யொத்தாள். 24

**கவிக்கூற்று.**

வாச நாண் மலரோ னன்ன மாமுனி பணிம றுத
காசுலாங் கனகம் பைப்பூட் காகுத்தன் கன்னிப் போரிற்
கூசிவா ளரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க வஞ்சி
ஆசையா லுழலுங் கூற்றுஞ் சுவைசிறி தறிந்த தன்றே. 25

**தேவர்கள் வந்து முனிவனிடம் அஸ்திரங்களையெல்லாம் இராமனுக்குத் தருமாறுசொல்லிச் செல்லல்.**

யாமுமெம் மிருக்கை பெற்றே முனக்கிடை யூறு மில்லை.
கோமகற் கினிய தெய்வப் படைக்கலங் கொடுத்தி யென்னு
மாமுனிக் குரைத்துப் பின்னர் விற்கொண்ட மழையனுன்மேல்
பூமழை பொழிந்து வாழ்த்தி விண்ணவர் போயினரே. 26

## *8. வேள்விப்படலம்*

**விசுவாமித்திரன் இராமனுக்குப் படைக்கலந் தருதல்**

விண்ணவர் போய பின்றை விரிந்தபூ மழையி னூலே
தண்ணெனுங் கான நீங்கித் தாங்கருந் தவத்தின் மிச் கோன்

மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணறன் சொல்லே யன்ன படைக்கல மருளி னானே. 1

### படைக்கலங்கள் ராமபிரானை யடைதல்.

ஆறிய வறிஞன் கூறி யளித்தலு மண்ண றன்பால்
ஊறிய வுவகையோடு மும்பர்தம் படைக ளெல்லாம்
தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்க ளெல்லாம்
மாறிய பிறப்பிற் றேடி வருவபோல் வந்த வன்றே. 2

### பின்பு இரண்டு காவதம் முனிவன் முதலியோர் நடக்க, அங்குத்தோன்றிய பேராவத்தைக்குறித்து வினவிய இராமனுக்கு முனிவன் கூறத்தொடங்குதல்.

இனையன நிகழ்ந்த பின்னர்க் காவத மிரண்டு சென்றார்
அனையவர் கேட்க வாண்டோ ரரவம்வந் தணுகித் தோன்ற
முனைவவீ தியாவ தென்று முன்னவன் வினவப் பின்னர்
வினையற நோற்று நின்ற மேலவன் விளம்ப லுற்றான். 3

### சரயுவிற் கோமதி சங்கமமாகும்பேரொலி யென்று முனிவன் சொல்ல, பின் அவர்கள் வேறொருநதியை யடைதல.

மானச மடுவிற் றோன்றி வருதலாற் சரயு வென்றே
மேன்முறை யமரர் போற்றும் விழுநதி யதனி னோடும்
ஆனகோ மதிவந் தெய்து மரவம தென்ன வப்பாற்
போனபின் பவங்க டீர்க்கும் புனிதமா நதியை யுற்றார். 4

### கௌசிகிநதியின் வரலாறு:

சுரர்தொழு திறைஞ்சற் கொத்த தூநதி யாவ தென்று
வரமுனி தன்னை யண்ணல் வினவுற மலருள் வைகும்
பிரமனன் றளித்த வென்றிப் பெருந்தகைக் குசனென் றோதும்
அரசர்கோன் மனைவி தன்பா லளித்தவர் நால்வராகும். 5

### நதியின் செய்தி கேட்டு மசிழ்ந்து சிறிதுநடந்தபின் அங்குத் தோன்றிய சோலையை இராமன் வினவுதல்.

எம்முனை ணங்கை யிந்த விருநதி யாயி னாளென்று
அம்முனி புகலக் கேளா வதிசய மிகவுந் தோன்றச்
செம்மலு மிளைய கோவுஞ் சிறிதிடந் தீர்ந்த பின்னர்
மைம்மலி பொழில்யா தென்ன மாதவன் கூறலுற்றான். 6

**விசுவாமித்திரன் அச்சோலையின் தன்மையைக் கூறுபவனாய் வாமனாவதார விருத்தாந்தத்தைக் கூற மாவலிசரித்திரத்தையும் கூறலுறுகிறான்**

அச்சோலையின் சிறப்பு

தங்கணா யகனிற் றெய்வந் தான்பிறி தில்லென் றுன்னும்
மங்கைமார் சிந்தை போலத் தூயது மற்றுங் கேளாய்
எங்கணான் மறைக்குந் தேவ ரறிவிற்கும் பிறர்க்கு
மெட்டாச்
செங்கண்மா லிருந்து மேனாட் செய்தவஞ் செய்த தன்றே 7

திருமால் **வாமனனாதல்**

கால நுனித்துணர் காசிப னென்னும்
வாலறி வற்கதி திக்கொரு மகவாய்
நீல நிறத்து நெடுந்தகை வந்து ஓர்
ஆலமர் வித்தி னருங்குற ளானான். 8

வாமனன் மாவலியைப் புகழ்தல்

ஆண்டகை யவ்வகை கூறவ றிந்தோன்
வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்டகை யாயினி நின்னுழை வந்தோர்
மாண்டவ ரல்லவர் மாண்பில ரென்றான். 9

**வாமனன் மூவடிமண் வேண்டிப்பெற, சுக்கிரன் தடுத்தல்.**

சிந்தையு வந்தெதி ரென்செய வென்றான்
அந்தணன் மூவடி மண்ணரு ளுண்டேல்
வெந்திறலாயிது வேண்டு மெனாமுன்
தந்தனெ னென்றனன் வெள்ளி தடுத்தான். 10

**சுக்கிரன் தடுத்துக்கூறிய வார்த்தை.**

கண்ட திறத்திது கைதவ மைய
கொண்டல் நிறக்குற ளென்பது கொள்ளேல்
அண்டமு முற்று மகண்டமு மேனாள்
உண்டவ னாமி துணர்ந்துகொ ளென்றான். 11

**மாவலியினுத்தரம்.**

நினைக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து
தனக்கிய லாவகை தாழ்வது தாழ்வில்
கனக்கரி யானது கைத்தல மென்னின்
எனக்கிதன் மேனலம் யாதுகொ லென்றான். 12

மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயாது
ஏந்திய கைக்கொ டிரந்தவ ரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனும்
ஈந்தவ ரல்ல திருந்தவர் யாரே. 13
அடுப்ப வரும்பழி செய்ஞரு மல்லர்
கொடுப்பவர் முன்பு கொடேலென நின்று
தடுப்பவ ரேபகை தம்மையு மன்னர்
கெடுப்பவ ரன்னதொர் கேடிலை யென்றான். 14

மூன்றாவது அடிக்காகத் திருமால் மாவலிமுடிமேற் பாதம் வைத்தல்.

உலகெலா முள்ளடி யடக்கி யோரடிக்கு
அலகிலா தவ்வடிக் கன்பன் மெய்யதாம்
இலைகுலாந் துழாய்முடி யேக நாயகன்
சிலைகுலாந் தோளினாய் சிறியன் சாலவே. 15

முனிவன் இதுவே வேள்விக்கு ஏற்றஇடமெனல்

ஆதலா லருவினை யறுக்கு மாரிய
காதலாற் கண்டவர் பிறவி காண்குறார்
வேதநூன் முறைமையால் வேள்வி முற்றுவேற்கு
ஈதலா தில்லைவே றிருக்கற் பாலதே. 16

குமாரர்களைக் காவலாக ஏவி, முனிவன் வேள்விதொடங்குதல்.

ஈண்டிருந் தியற்றுவென் யாகம் யானென
நீண்டபூம் பழுவத்து நெறியி னெய்திப்பின்
வேண்டுவ கொண்டுதன் வேள்வி மேவினான்
காண்டகு குமரரைக் காவ லேவியே. 17

குமாரர்கள் யாகத்தைக் காத்தல்

எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர். 18

அரக்கர் எப்போது வருவரென்று ஸ்ரீராமன் முனிவனை வினாதல்.

காத்தனர் திரிகின்ற காளை வீரரில்
மூத்தவன் முழுதுணர் முனியை முன்னிநீ
தீத்தொழி லியற்றுவ ரென்ற தீயவர்
ஏத்தருங் குணத்தினாய் வருவதென் றென்றான். 19

## முனிவன் மௌனியாயிருக்க, இராமன் வானத்தைக் காண்கையில் அங்கு அரக்கர் ஆரவாரஞ் செய்தல்.

வார்த்தைமா றுரைத்திலன் முனிவன் மோனியாய்ப்
போர்த்தொழிற் குமரனுந் தொழுது போந்தபின்
பார்த்தனன் விசும்பினைப் பருவ மேகம்போல்
ஆர்த்தன ரிடித்தன ரச்னி யஞ்சவே. 20

## யாகசாலையில் அரக்கரின் இரத்தம் சிந்தாதபடி இராமன் சரகூடம் கட்டுதல்

தூமவே லரக்கர்தந் நிணமுஞ் சோரியும்
ஓமவெங் கனலிடை யுகுமென் றுன்னியத்
தாமரைக் கண்ணனுஞ் சரங்க ளேகொடு
கோமுனி யிருக்கையோர் கூட மாக்கினான். 21

## அப்போது முனிவர்கள் அரக்கர்கட்கு அஞ்சி ஸ்ரீராமனை அபயம் வேண்டுதல்.

நஞ்சட வெழுதலு நடுங்கி நாண்மதிச்
செஞ்சடைக் கடவுளை யடையுந் தேவர்போல்
வஞ்சனை யரக்கரை வெருவி மாதவர்
அஞ்சன வண்ணநின் னபயம்யா மென்றார். 22

## இராமன் அஸ்திரங்களால் மாரீசனைக் கடலில் தள்ளிச் சுபாகுவைக் கொல்லுதல்.

திருமக ணாயகன் றெய்வ வாளிதான்
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரி னொருவனைக் கடலி னிட்டதங்கு
ஒருவனை யந்தகன் புரத்தி னுய்த்ததே. 23

## விசுவாமித்திரன் இராமனிடங் கூறிய முகமன்.

பாக்கி யம்மெனக் குளதென நினைவுறும் பான்மை
போக்கி நிற்கிது பொருளென வுணர்கிலென் புவனம்
ஆக்கி மற்றவை யகிலமு மணிவயிற் றடக்கிக்
காக்கு நீயொரு வேள்விகாத் தனையெனுங் கருத்தே. 24

## 'இன்று எனக்குப்பணியாது?' என்று இராமன் முனிவனை வினாதல்.

என்று கூறிய பின்னரவ் வெழின்மலர்க் கானத்து
அன்று தானுறைந் தருந்தவ முனிவரோ டிருந்த

குன்று போற்குணத் தானெதிர்க் கோசலை குரிசில்
இன்றி யான்செயும் பணியென்கொல் பணியென
விசைத்தான். 25

முனிவன் சனகராசனதுவேள்வியைக் காணப்போவோமென்ன,
மூவரும் மீதிலைக்குப் புறப்படுதல்.

அரிய யான்சொலி னையநிற் கரியதொன் றில்லை
பெரிய காரிய முளவவை முடிப்பது பின்னர்
விரியும் வார்புனன் மருதஞ்சூழ் மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியுங் காண்டுநா மெழுகென்று போனார். 26

## 9. அகலிகைப்படலம்

முனிவன்முதலிய மூவரும் சோணைநதியை யடைதல்.

அலம்பு மாமணி யாரத்தொ டகிலனை புளினம்
நலம்பெய் பூண்முலை நாகிள வஞ்சியா மருங்குல்
புலம்பு மேகலைப் புதுமலர்ப் புனையறற் கூந்தல்
சிலம்பு ஒழுங்காற் சோணையாந் தெரிவையைச்
சேர்ந்தார். 1

சூரியாத்தமன வருணனை.

நதிக்கு வந்தவ ரெய்தலு மருணன்ற னயனக்
கதிக்கு முந்துறு கலினமான் றேரொடுங் கதிரோன்
உதிக்குங் காலையிற் றண்மைசெய் வான்றன துருவில்
கொதிக்கும் வெம்மையை யாற்றுவான் போற்கடல்
குளித்தான். 2

அன்றிரவு மூவரும் ஒரு சோலையில் தங்குதல்.

கறங்கு தண்புனற் கடிநெடுந் தாளுடைக் கமலத்து
அறங்கொ ளுண்மலர்க் கோயில்க ளிதழ்க்கத வடைப்பப்
பிறங்கு தாமரை வனம்விட்டுப் பெடையொடுங்
களிவண்டு
உறங்கு கின்றதோர் நறுமலர்ச் சோலைபுக் குறைந்தார். 3

இராமன் அந்தச் சோலையை வினவ, முனிவன் கூறுதல்.

இனைய சோலைமற் றியாதென விராகவன் வினவ
வினையெ லாமற நோற்றவன் விளம்புவான் மேனாள்
தனைய ரானவர்க் கிரங்கியே காசிபன் றனது
மனையு ளாடவம் புரிந்தன னிவணென வலித்தான். 4

**விசுவாமித்திரன் சரவணத்தைக் காட்டுதல்.**

ஆய திவ்விட மவ்விட மவிர்மதி யணிந்த
தூய வன்றனக் குமைவயிற் றோன்றிய தொல்லை
வாயு வும்புனற் கங்கையும் பொறுக்கலா வலத்த
சேய்வ ளர்ந்தருள் சரவண மென்பதுந் தெரித்தான். 5

**சூரியோதய வருணனை.**

காலன் மேனியிற் கருகிருள் கடிந்துல களிப்பான்
நீல வார்கலித் தேரொடு நிறைகதிர்க் கடவுள்
மாலின் மாமணி யுந்தியி னயனொடு வந்த
மூல தாமரை முழுமலர் முளைத்தென முளைத்தான். 6

**மூவரும் கங்கையைக் காணுதல்.**

அங்கு நின்றெழுந் தயன்முதன் மூவரு மனையார்
செங்க ணேற்றவன் செறிசடைப் பழுவத்தி னிறைதேன்
பொங்கு கொன்றையிர்த் தொழுகலாற் பொன்னியைப்
பொருவுங்
கங்கை யென்னுமக் கரைபொரு திருநதி கண்டார். 7

**கங்கையின் வரலாறு:**
முனிவன் சகரனென்றொருவ னுளனெனல்.

இந்த மாநதிக் குற்றுள தகைமைய யாவும்
எந்தை கூறுகென் றிராகவன் வினவுற வெனையாள்
மைந்த நின்றிரு மரபுளா னயோத்திமா நகர்வாழ்
விந்தை சேர்புயன் சகரனிம் மேதினி புரந்தோன். 8

**கங்கையின் சிறப்பு.**

அண்ட கோளகைப் புறத்ததா யகிலமன் றளந்த
புண்ட ரீகமென் பதத்திடைப் பிறந்துபூ மகனார்
கொண்ட தீர்த்தமா யரன்கொளப் பகிரதன் கொணர
மண்ட லத்துவந் தடைந்ததிவ் வானதி மைந்த. 9

**க்ங்கையைக் கடந்து, விசாலையையடைந்து அங்கரவரசன்
கௌரவிக்க, பின்பு மூவரும் விதேகநாட்டை யடைதல்.**

என்று கூறலும் வியப்பினொ டுவந்தன ரிறைஞ்சிச்
சென்று தீர்த்தனர் கங்கையை விசாலைவாழ் சிகரக்
குன்று போற்புயத் தரசன்வந் தடியிணை குறுக
நின்று நல்லுரை விளம்பிமற் றவ்வயி னீங்கா. 10

## மிதிலையைக்கிட்டி விசுவாமித்திரன் அகலிகை கல்லாய்க்கிடக்கும் மேட்டைக்காணுதல்

இனைய நாட்டினி லினிதுசென் றிஞ்சிசூழ் மிதிலை
புனையு நீள் கொடிப் புரிசையின் புறத்துவந் திறுத்தார்
மனையின் மாட்சியை யழித்திழி மாதவப் பன்னி
கனையு மேட்டுயர் கருங்கலோர் வெள்ளிடைக்
கண்டார். 11

## அகலிகை சாபவடிவம் நீங்கி முன்னைய வடிவம் பெறுதல்.

கண்ட கன்மிசைக் காகுத்தன் கழற்றுகள் கதுவ
உண்ட பேதைமை மயக்கற வேறுபட் டுருவம்
கொண்டு மெய்யுணர் பவன்கழல் கூடிய தொப்பப்
பண்டை வண்ணமாய் நின்றனன் மாமுனி பணிப்பான். 12

## சாபம்நீங்கிய அகலிகையை முனிவன் இராமனுக்கு அறிவித்தல்.

மாயிரு விசும்பிற் கங்கை மண்மிசைக் கொணர்ந்தோன்
மைந்த
மேயின வுவகை யோடு மின்னென வொதுங்கி நின்றாள்
தீவினை நயந்து செய்த தேவர்கோன் றனக்குச்
செங்கண்
ஆயிர மளித்தோன் பன்னி யகலிகை யாகு மென்றான். 13

## ஸ்ரீராமன் அகலிகையின் சாபவரலாற்றை வினவுதல்.

பொன்னையேர் சடையான் கூறக் கேட்டலும் பூமின்
கேள்வன்
என்னையே யென்னை யேயிவ் வுலகிய லிருந்த வண்ணம்
முன்னையூழ் வினையி னாலோ நடுவொன்று முடிந்த
துண்டோ
அன்னையே யனையாட் கிவ்வா றடுத்தவா றருளு
கென்றான். 14

தையலா ணயன வேலு மன்மதன் சரமும் பாய
உய்யலா முறுதி நாடி யுழல்பவ னொருநா ளுற்ற
மையலா லறிவு நீங்கி மாமுனிக் கற்றஞ் செய்து
பொய்யிலா வுள்ளத் தான்ற னுருவமே கொண்டு
புக்கான். 15

### அகலிகை நடுங்கிநிற்க, இந்திரன் அஞ்சிப் பூனையாய்ப் போகத் தொடங்குதல்.

சரந்தரு சாப மல்லாற் றடுப்பருஞ் சாபம் வல்ல
வரந்தரு முனிவ னெய்த வருதலும் வெருவி மாயா
நிரந்தர முலகி னிற்கு நெடும்பழி பூண்டாள் நின்றான்
புரந்தர னடுங்கி யாங்கோர் பூசையாய்ப் போக
ஓுற்றான். 16

### இந்திரனுக்குக் கௌதமன் சாபங்கொடுத்தல்

தீவிழி சிந்த நோக்கிச் செய்ததை யுணர்ந்து செய்ய
தூயவ னவனை நின்கைச் சுடுசர மனைய சொல்லால்
ஆயிர மாதர்க் குள்ள வறிகுறி யுனக்குண் டாகென்று
ஏயின னவையெ லாம்வந் தியைந்தன விமைப்பின்
முன்னம். 17

### அகலிகைக்குக் கௌதமன் சாபங் கொடுத்தல்.

எல்லையி லுண மெய்சி யாவர்க்கு நகைவந் தெய்தப்
புல்லிய பழியி னோடும் புரந்தரன் போய பின்றை
மெல்லிய லாளை நோக்கி விலைமக ளனைய நீயும்
கல்லிய லாதி யென்றான் கருங்கலாய் மருங்கு
வீழ்வாள். 18

### அகலிகை வேண்ட, கௌதமமுனிவன் சாபவிமோசனவகை கூறல்

பிழைத்தது பொறுத்த லென்றும் பெரியவர் கடனே
யென்பார்
அழற் றருங் கடவு ளன்னாய் முடிவிதற் கருளு கென்னத்
தழைத்துவண் டிமிருந் தண்டார்த் தசரத ராம
னென்பான்
கழற்றுகள் கதுவ விந்தக் கல்லுருத் தவிர்தி யென்றான். 19

### பிரமனை முன்னிட்டுத் தேவர்கள் வேண்ட, இந்திரன் சாபத்தை ஒருவாறு முனிவன் போக்குதல்.

அந்தவிந் திரனைக் கண்ட வமரர்கள் பிரமன் முன்னா
வந்துகோ தமனை வேண்ட மற்றவை தவிர்த்து மாறாச்
சிந்தையின் முனிவுதீர்ந்து சிறந்தவா யிரங்கண் ணாக்கத்
தந்தம துலகு புக்கார் தையலுங் கிடந்தாள் கல்லாய். 20

## விசுவாமித்திரன் இராமனைப் புகழ்தல்

இவ்வண்ண நிகழ்ந்த வண்ண மினியிந்த வுலகுக்
கெல்லாம்
உய்வண்ண மன்றி மற்றோர் துயர்வண்ண முறுவ
துண்டோ
மைவண்ணத் தரக்கி போரின் மழைவண்ணத் தண்ண
லேயுன்
கைவண்ண மங்குக் கண்டேன் கால்வண்ண மிங்குக்
கண்டேன். 21

## இராமன் அகலிகைக்கு முகமன் கூறி விடைகொடுத்து வணங்கிச் செல்லல்.

தீதிலா வுதவி செய்த சேவடிக் கரிய செம்மல்
போதிலாக் குணத்தான் சொன்ன பொருளெலா
மனத்திற் கொண்டு
மாதவ னருளுண்டாக வழிபடு படரு ருதே
போதுநீ யன்னை யென்று பொன்னடி வணங்கிப்
போனான் 22
அஞ்சன வண்ணத் தான்ற னடித்துகள் கதுவா முன்னம்
வஞ்சிபோ லிடையாண் முன்னை வண்ணத்த
ளாகிநின்றாள்
நெஞ்சினாற் பிழைப்பிலாளை நீயழைத் திடுக வென்னக்
கஞ்சமா முனிவ னன்ன முனிவனுங் கருத்துட்
கொண்டான். 23

## அகலிகையைக் கௌதமனிடஞ் சேர்ப்பித்தபின்பு விசுவாமித்திரன் முதலிய மூவரும் மிதிலாநகரின் மதிலைப் பார்த்தல்.

குணங்களா லுயர்ந்த வள்ளல் கோதமன் கமலத்
தாள்கள்
வணங்கினன் வலங்கொண் டேத்தி மாசறு கற்பின் மிக்க
அணங்கினை யவன்கை யீந்தாண் டருந்தவ னோடும் வாசம்
மணங்கிளர் சோலை நீங்கி மணிமதிற் கிடக்கை
கண்டார். 24

# 10. மிதிலைக்காட்சிப் படலம்.

## மிதிலைவருணனை:

### கொடிகளின் காட்சி.

மையறு மலரி னீங்கி யான்செய்மா தவத்தின் வந்து
செய்யவ ளிருந்தா ளென்று செழுமணிக் கொடிக
ளென்னும்
கைகளை நீட்டி யந்தக் கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை யொல்லை வாவென் றழைப்பது போன்ற
தம்மா. 1

### அம்மூவரும் மிதிலாநகரத்தினுள் செல்லுதல்.

ஆதரித் தமுதிற் கோஷேய்த் தவயவ மமைக்குந்
தன்மை
யாதெனத் திகைக்கு மல்லான் மதனற்கு மெழுத
வொண்ணுர்
சீதையைத் தருத லாலே திருமக ளிருந்த செய்ய
போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதின் மிதிலை
புக்கார். 2

### அவர்கள் அந்நகர்வீதியிற் சென்றமை

சொற்கலை முனிவ னுண்ட சுடர்மணிக் கடலுந் துன்னி
அற்கலந் திலங்கு பன்மீ னரும்பிய வானும் போல
விற்கலை நுதலி னுரு மைந்தரும் வெறுத்து நீத்த
பொற்கலன் கிடந்த மாட நெடுந்தெரு வதனிற்
போனார் 3

### நடனசாலைக் காட்சி.

நெய்திர ணரம்பிற் றந்த மழலையி னியன்ற பாடல்
தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக்
கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல
ஐயநுண் ணிடையா ராடு மாடக வரங்கு கண்டார். 4

### கடைத்தெருவின் காட்சி.

வரப்பறு மணியும் பொன்னு மாரமுங் கவரி வாலும்
சுரத்திடை யகிலும் மஞ்ஞைத் தோகையுந் தும்பிக்
கொம்பும்
குரப்பணை நிரப்பு மள்ளர் குவிப்புறக் கரைகடோறும்
பரப்பிய பொன்னி யன்ன வாவணம் பலவுங் கண்டார். 5

மகளிர் கீதம்பாடுகின்ற இடங்களின் காட்சி,

வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த
கள்ளென நரம்பு வீக்கிக் கையொடு மனமுங் கூட்டி
வெள்ளிய முறுவ லேன்ற விருந்தென மகளி ரீந்த
தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத் தினிது
சென்றார். 6

மகளிர் பூக்கொய்து விளையாடுஞ் சோலைகளின் காட்சி.

பாகொக் குஞ்சொற் பைங்கிளி யோடும் பலபேசி
மாகத் தும்பர் மங்கையர் நாண மலர்கொய்யுந்
தோகைக் கொம்பி னன்னவர்க் கன்ன நடைதோற்றுப்
போகக் கண்டு வண்டின மார்க்கும் பொழில்கண்டார். 7

அரண்மனையிலுள்ள கன்னிமாடத்துச் சீதையைக் காணுதல்

பொன்னின் சோதி போதினி னாற்றம் பொலிவேபோல்
தென்னுண் டேனிற் றீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்
கன்னிம் மாடத் தும்பரின் மாடே களிபேடோடு
அன்னம் மாடு முன்றுறை கண்டாங் கயனின்றார். 8

சீதாபிராட்டியாரைப் பற்றிய கவிக்கூற்று.

செப்புங் காலைச் செங்கமலத்தோன் முதல்யாரும்
ஒப்பெண் பாலும் கொண்டுவ மிப்போ ருவமிக்கும்
அப்பெண் டானே யாயின போதிங் கயல் வேறோர்
ஒப்பெங் கேகொண் டெவ்வகை நாடி யுரை செய்வோம். 9

சீதையின் வருணனை.

உமையா ளொக்கு மங்கைய ருச்சிக் கரம் வைக்கும்
கமையாண் மேனி கண்டவர் காட்சிக் கரை காண
இமையா நாட்டம் பெற்றில மென்றா ரிருகண்ணால்
அமையா தென்றா ரந்தர வானத் தவரெல்லாம். 10

பெருந்தே னின்சொற் பெண்ணிவ ளொப்பா
ளொருபெண்ணைத்
தருந்தா னென்றா னன்முக னின்னுந் தர லாமே
அருந்தா வந்தத் தேவ ரிரந்தா லமிழ்தென்னும்
மருந்தே யல்லா தென்னினி நல்கும் மணியாழி. 11

அனையாண் மேனி கண்டபி னண்டத் தரசாளும்
வினையோர் மேவும் மேனகை யாதிம் மிளிர்வேற்கண்
இனையோ ருள்ளத் தின்னலி னோர்தம் முகமென்னும்
பனிதோய் வானின் வெண்மதிக் கென்றும் பகலன்றே. 12

மலர்மே னின்றிம் மங்கையிவ் வையத் திடைவைகப்
பலகா லுந்தம் மெய்ந்நனி வாடும் படிநோற்றார்
அலகோ வில்லா வந்தண ரோநல் லறமேயோ
உலகோ வானோ வும்பர்கொ லோவீ துணரேமால். 13

தந்நே ரில்லா மங்கையர் செங்கைத் தளிர்மானே
அன்னே தேனே யாரமிர் தேயென் றடி போற்றி
முன்னே முன்னே மொய்ம்மலர் தூவி முறைசாரப்
பொன்னே சூழும் பூவினொ டுதுங்கிப் பொலிகின்றாள். 14

பொன்சேர் மென்காற் கிண்கிணி யாரம் புனை யாரம்
கொன்சே ரல்குன் மேகலை தாங்கிக் கொடியன்னார்
தன்சேர் கோலத் தின்னெழில் காணச் சதகோடி
மின்சேவிக்க மின்னர சென்னும் படிநின்றாள். 15

கொல்லும் வேலுங் கூற்றமு மென்னும் மிவையெல்லாம்
வெல்லும் வெல்லும் மென்ன மதர்க்கும் விழிகொண்டாள்
சொல்லுந் தன்மைத் தன்றது குன்றுஞ் சுவருந்திண்
கல்லும் புல்லுங் கண்டுரு கப்பெண் கனிநின்றாள். 16

வெங்களி விழிக்கொரு விழவு மாயவர்
கண்களிற் காணவே களிப்பு நல்கலான்
மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள்
எங்கணு யகற்கினி யாவ தாங்கொலோ. 17

இழைகளுங் குழைகளு மென்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்
பழகிய வெனினுமிப் பாவை தோன்றலால்
அழகெனு மணியுமோ ரழகு பெற்றவே. 18

இராமபிரானும் சீதாதேவியும்
ஒருவரையொருவர் கண்டு மிக்க காதல்கொண்டமை
கூறப்படுகிறது.

எண்ணரு நலத்தினா ளினைய ணின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றையொன்று
உண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள். 19

நோக்கிய நோக்கெனு நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் றோளி னாழ்ந்தன
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்
தாக்கணங் கனையவ ளனத்திற் றைத்தவே. 20

பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்து
ஒருவரை யொருவர்த முள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும்
இருவரு மாறிப்புக் கிதய மெய்தினார். 21

மருங்கிலா நங்கையும் வசையி லையனும்
ஒருங்கிய விரண்டுடற் குயிரொன் றாயினார்
கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ. 22

## கன்னிமாடத்தயல் சீதையைக் காதல்நோக்குடன் கண்ட ஸ்ரீராமன் முனிவனொடும் போய்விடுதல்

அந்தமில் நோக்கிமை யணைகி லாமையால்
பைந்தொடி யோவியப் பாவை போன்றனள்
சிந்தையு நிறையுமெய்ந் நலனும் பின்செல
மைந்தனு முனியொடு மறையப் போயினான். 23

## சீதையின் காதல் நோய் வருணனை

பிறையெனு நுத லவள் பெண்மை யென்படும்
நறைகம ழலங்கலா னயன கோசரம்
மறைதலு மனமெனு மத்த யானையின்
நிறையெனு மங்குச நிமிர்ந்து போயதே. 24

மாலுற வருதலு மனமு மெய்யுந்தன்
நூலுறு மருங்குல்போ லுடங்கு வாணெடுங்
காலுறு கண்வழிப் புகுந்த காதனோய்

பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே. 25
நேரமுறு நோய்நிலை நுவல கிற்றிலள்
ஊமரின் மனத்திடை யுன்னி விம்முவாள்
காமனு மொருசரங் கருத்தி லெய்தனன்

வேமெரி யதனிடை விறகிட் டென்னவே. 26
தழங்கிய கலைகளு நிறையுஞ் சங்கமும்

மழுங்கிய வுள்ளமு மறிவு மாமையும்
இழந்தவ ளிமையவர் கடைய யாவையும்
வழங்கிய கடலென வறிய ளாயினாள். 27

## சீதையின் நோய்க்குப் பரிகாரஞ் செய்யத் தோழிமார் அன்னளை யிட்டுக்கொண்டுபோதல்.

கலங்குழைந் துகநெடு நாணுங் கண்ணற
நலங் குழை தரநகின் முகத்தி னேவுண்டு
மலங்குழை யெனவுயிர் வருந்திச் சோர்தரப்
பொலங்குழை மயிலைக்கொண் டரிதிற் போயினார். 28

## தோழிமார் சீதையை மலர்ப்படுக்கையிற் சேர்த்தல்

காதொடுங் குழைபொரு கயற்க ணங்கைதன்
பாதமுங் கரங்களு மனைய பல்லவம்
தாதொடுங் குழையொடு மடுத்த தண்பனிச்
சீதநுண் டுளிமல ரமளிச் சேர்த்தினார். 29
கம்பமில் கொடுமனக் கான வேடன்கை
அம்பொடு சோர்வதோர் மயிலு மன்னவள்
வெம்புறு மனத்தனல் வெதுப்ப மென்மலர்க்
கொம்பென வமளியிற் குழைந்து சாய்ந்தனள். 30
சொரிந்தன நறுமலர் சுறுக்குண் டேறின
பொரிந்தன கலவைகள் பொறியிற் சிந்தின
எரிந்தவெங் கனல்சுட விழையிற் கோத்தநூல்
பரிந்தன கரிந்தன பல்ல வங்களே. 31

## சீதைக்குக் காமநோய் நேர்ந்துள்ளதென்பதை யறியாத தாதியர் முதலியோர் திருஷ்டிகழித்தல்.

தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர்
மாதுய ருழந்துழந் தழுங்கி மாழ்கினர்
யாதுகொ லிதுவென வெண்ண றேற்றலர்
போதுட னயினிநீர் சுழற்றிப் போற்றினர். 32

## காமவெப்பம்மிக்க சீதையின் வருணனை.

அருகினின் றசைக்கின்ற வால வட்டக்கால்
எரியினை மிகுத்திட விழையு மாலையும்
கரிகுவ தீவன கனல்வ காட்டலால்
உருகுபொற் பாவையு மொத்துத் தோன்றினாள். 33

## காதல்நோய்கொண்ட சீதாபிராட்டியின் வாய்பிதற்றல்.

அல்லினை வகுத்ததோ ரலங்கற் காடெனு
வல்லெழு வல்லவேன் மரக தப்பெருங்

கல்லெனு மிருபுயங் கமலங் கண்ணெனும்
வில்லொடு மிருந்ததோர் மேக மென்னுமால் 34

நெருங்கியுட் புகுந்தரு நிறையும் பெண்மையும்
உருக்கியென் னுயிரொடு முண்டு போனவன்
பொருப்புறழ் தோள்புணர் புண்ணி யத்தனு
கருப்புவில் லன் றவன் காம னல்லனே. 35

பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
எண்வழி யுணர்வு நா னெங்குங் காண்கிலேன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையு மோர் கள்வ னேகொலாம். 36

இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்
சந்திர வதனமுந் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளு மேயல
முந்தியென் னுயிரையம் முறுவ லுண்டதே. 37

படர்ந்தொளி பரந்துயிர் பருகு மாகமும்
நடந்தரு தாமரைத் தாளு மேயல
கடந்தரு மாமதக் களிநல் யானைபோல்
நடந்தது கிடந்ததென் னுள்ள நண்ணியே. 38

உரைசெயிற் றேவர்தம் முலகு ளானலன்
விரைசெறி தாமரை யிமைக்கு மெய்ம்மையான்
வரிசிலைத் தடக்கையன் மார்பி னூலினன்
அரசிளங் குமரனே யாகல் வேண்டுமால். 39

பிறந்துடை நலநிறை பிணித்த வெந்திரம்
கறங்குபு திரியுமென் கன்னி மாமதில்
எறிந்தவக் குமரனை யின்னுங் கண்ணிற்கண்டு
அறிந்துயி ரிழக்கவு மாகுமே கொலாம். 40

சீதாபிராட்டி காமவேட்கையால் பின்னும் வாய்பிதற்றி யுருகியமை

என்றிவை யினையன விளம்பு மெல்லையின்
நின்றன னிவனெனு நீங்கி னானெனும்
கன்றிய மனத்துறு காம வேட்கையால்
ஒன்றல பலநினைந் துருகுங் காலையே. 41

சூரியாஸ்தமன வருணனை.

அன்னமென் னடையவட் கமைந்த காமத்தீத்
தன்னையுஞ் சுடுவது தரிக்கி லானென

நன்னெடுங் கரங்களை நடுக்கி யோடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலின் மூழ்கினான். 42

### அந்திமாலை தோன்றியதன் வருணனை.

மீதறை பறவையாம் பறையுங் கீழ்விளி
ஓதமென் சிலம்பொடு முதிரச் செக்கரும்
பாதக விருள்செய்கஞ் சுகமும் பற்றலாற்
சாதக மென்னவுந் தகைத்திம் மாலையே. 43

### அந்திமாலைப்பொழுதைக் குறித்துப் பிராட்டி யிரங்கல்.

மைவானிறத்து மீனெயிற்று வாடை யுயிர்ப்பின் வளர்செக்கர்ப்
பைவா யந்திப் படரவே யென்னு வளைத்துப் பகைத்தியால்
எய்வா னொருவன் கையோயா னுயிரு மொன்றே யினியில்லை
உய்வா னுறவிப் பழி பூண வென்னோ டுனக்குப் பகையுண்டோ. 44

### பிராட்டி அன்றிற்பறவையை நோக்கி இரங்கியது.

வெளிநின் றவரோ போய்மறைந்தார் விலக்க வொருவர் தமைக்காணேன்
எளியள் பெண்ணென் றிரங்காதே யெல்லி யாமத் திருளூடே
ஒளியம பெய்யு மன்மதனு ருனக்கிம் மாய முரைத்தாரோ.
அளியென் செய்த தீவினையே யன்றி லாகி வந்தாயோ. 45

### தோழிமார் செய்த உபசாரம்

ஆண்டங் கனையா ளினையநினைந் தழுங்கு மேல்வை யகல் வானந்
தீண்ட நிமிர்ந்த பெருங்கோயிற் சீத மணியின் வேதி கைவாய்
நீண்ட சோதி நெய்விளக்கம் வெய்ய வென்றங் கவை நீக்கித்
தூண்டல் செய்யா மணிவிளக்கின் சுடரா லிரவைப் பகல்செய்தார். 46

## சந்திரோதய வருணனை

பெருந்திண் ணெடுமால் வரைநிறுவிப் பிணித்த பாம்பின்
மணித்தாம்பின்
விரிந்த திவலை யுதிர்ந்தமணி விசும்பின் மீனின்
மேல்விளங்க
அருந்த வமரர் கலக்கியநா ளமுது நிறைந்த பொற்கலசம்
இருந்த திடைவந் தெழுந்ததென வெழுந்த தாழி
வெண்டிங்கள். 47

நீத்த மதனின் முளைத்தெழுந்த நெடுவெண் டிங்களெனுந்
தச்சன்
மீத்தன் கரங்க ளவைபரப்பி மிகுவெண் ணிலவாம்
வெண்சுதையாற்
காத்த கண்ணன் மணியுந்திக் கமல நாளத் திடைப்பண்டு
பூத்த வண்டம் பழையதென்று புதுக்கு வானும்
போன்றுளதால். 48

## சந்திரனைப் பழிப்பது.

நீங்கா மாயை யவர்தமக்கு நிறமே தோற்றுப்
புறமேபோய்
ஏங்காக் கிடக்கு மெறிகடற்கு மெனக்குங்கொடியை
யானுயே
ஓங்கா நின்ற விருளாய்வந் துலகை விழுங்கி மென்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பி னிடையே யெழுந்த
வெண்ணெருப்பே. 49

கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
வடுவி லின்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடென் றுலெனைச்
சுடுதி யோகடற் றோன்றிய திங்களே. 50

## பிராட்டியினது காமவெப்பம்.

மீது மொய்த்தெழு வெண்ணில வின்கதிர்
மோது மத்திகை மென்முலை மேற்பட
ஓதிமப்பெடை வெங்கன லுற்றெனப்
போது மொய்த்தம ளிப்புரண் டாளரோ. 51

நீக்க மின்றி நிமிர்ந்த நிலாக்கதிர்
தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள்
சேக்கை யாகி மலர்ந்த செந்தாமரைப்
பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள். 25

வாச மென்கல வைக்களி வாரிமேற்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்
வீச வீச வெதும்பினண் மென்முலை
ஆசை நோய்க்கு மருந்துமுன் டாங்கொலோ. 53

தோழிமார் பிராட்டிக்குச் செய்த உபசாரம்

தாய ரிற்பரி சேடியர் தாதுகு
வீய ரித்தளிர் மெல்லணை மேனியில்
காயெ ரிக்கரி யக்கரி யக்கொணர்ந்து
ஆயி ரத்தி னிரட்டி யடுக்கினர். 54

சீதைநிலை இவ்வாருக, இனி, இராமபிரான்
நிலையைச் சொல்வோமெனல்.

கன்னி நன்னக ரிற்கமழ் சேக்கையுள்
அன்ன மின்னண மாயின ளாயவள்
மின்னின் மின்னிய மேனிகண் டானெனச்
சொன்ன வண்ணலுக் குற்றது சொல்லுவாம். 55

விசுவாமித்திரன் முதலிய மூவரும் ஜநகராஜனுல்
எதிர்கொள்ளப்பட்டு அவன் காட்டிய மாளிகையில் தங்குதல்

ஏகி மன்னனைக் கண்டெதிர் கொண்டவன்
ஓகை யோடு மினிதுகொண் டுய்த்திடப்
போக பூமியிற் பொன்னக ரன்னதோர்
மாக மாடத் தனைவரும் வைகினர். 56

அங்குச் சதாநந்தமுனிவன் வருதல்.

வைகு மவ்வுழி மாதவம் யாவுமோர்
செய்கை கொண்டு நடந்தெனத் தீதறு
மொய்கொள் வீரன் முளரியந் தாளினன்
மெய்கொண் மங்கை யருண்முனி மேவினன். 57

இராமனை வாழ்த்திச் சதாநந்தன் விசுவாமித்திரனருகு
சார்தல்.

வந்தெ திர்ந்த முனிவனை வள்ளலும்
சிந்தை யார வணங்கலுஞ் சென்றெதிர்
அந்த மில்குணத் தானெடி தாசிகள்
தந்து கோசிகன் றன்மருங் கெய்தினன். 58

சதாநந்தன் விசுவாமித்திரனை நோக்கி முகமன் கூறுதல்.

கோத மன்றரு கோமுனி கோசிக
மாத வன்றனை மாமுக நோக்கியிப்
போக நீயிவட் போதவிப் பூதலம்
ஏது செய்த தவமென் றியம்பினுன். 59

சதானந்த முனிவனுக்கு இராமனது பெருமையை
விசுவாமித்திரன் தெரிவித்தல்

வடித்த மாதவ கேட்டியிவ் வள்ளறுன்
இடித்த வெங்குரற் றுடகை யாக்கையும்
அடுத்தென் வேள்வியு நின்னன்னை சாபமும்
முடித்தென் னெஞ்சத் திடர்முடித் தானென்றான். 60

விசுவாமித்திரனது சரிதையைக் கூறக்கருதி
சதாநந்தன் இராமனது முகத்தைப் பார்த்தல்

எள்ளில் பூவையு மிந்திர நீலமும்
அள்ளல் வேலையு மம்புத சாலமும்
விள்ளும் வீயுடைப் பானலு மேவுமெய்
வள்ள றன்னை மதிமுக நோக்கியே. 61

கௌசிகன் சரிதையைச் சதாநந்தன் முடித்திடல்

ஈது முன்னர் நிகழ்ந்த திவன்றனை
மாத வத்துயர் மாண்புடை யாரிலை
நீதி வித்தகன் றன்னரு ணோர்ந்தனிர்
யாது மக்கரி தென்றன னீறிலான். 62

சதாநந்தன் குமாரர்களை வாழ்த்திவிட்டுப் போதல்

என்று கோதமன் காதலன் கூறிட
வென்றி வீரர் வியப்பொடு வந்தெழா
ஒன்று மாதவன் றுடொழு தோங்கிய
பின்றை யேத்திப் பெயர்ந்தனன் றன்னிடம். 63

முனிவனும் இலக்குமணனும் படுக்குமிடத்தைச் சேர, இராமன்
சீதையை எண்ணியவண்ண மிருத்தல்.

முனியுந் தம்பியும் போய்முறை யாற்றமக்கு
இனிய பள்ளிக ளெய்தினர் பின்னிருட்
கனியும் போல்பவன் கங்குலுந் திங்களும்
தனியுந் தானுமத் தையலு மாயினுன். 64

## இராமபிரான் சீதையின் உருவெளிப்பாட்டை நோக்கித் தன்னுட்கூறுவன.

விண்ணி னீங்கிய மின்னுரு விம்முறைப்
பெண்ணி னன்னலம் பெற்றதுண் டேகொலோ
எண்ணி னீதல தென்றறி யேனிரு
கண்ணி னுள்ளுங் கருத்தினுங் காண்பாரல். 65

அருளி லாளெனி னும்மனத் தரசையால்
வெருளு நோய்விடக் கண்ணின் விழுங்கலால்
தெருளி லாவுல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாமவள் பொன்னுரு வாயவே. 66

பூணு லாவிய பொற்கல சங்களென்
ஏணி லாகத் தெழுதல வென்னினும்
வாணி லாமுறு வற்கனி வாய்மதி
காண லாவதொர் காலமுண் டாங்கொலோ. 67

வண்ண மேகலை தேரொன்று வாணெடுங்
கண்ணி ரண்டு கதிமுலை தாமிரண்டு
உண்ணி வந்த நகையுமென் றொன்றுண்டால்
எண்ணுங் கூற்றினுக் கித்தனை வேண்டுமோ. 68

கன்ன லின்கருப் புச்சிலை யான்விரை
பொன்னை முன்னிய பூங்கணை மாரியால்
என்னை யெய்து தொலைக்குமென் றுலினி
வன்மை யென்னுமி தாரிடை வைகுமே. 69

கொள்ளை கொள்ளக் கொதித்தெழு பாற்கடல்
பள்ள வெள்ள மெனப்பட ருந்நிலா
உள்ள வுள்ள வுயிரைத் துருவிட
வெள்ளை வண்ண விடமுமுன் டாங்கொலெொ. 70

ஆகு நல்வழி யல்வழி யென்மனம்
ஆகு மோவதற் காகிய காரணம்
பாகு போன்மொழிப் பைந்தொடி கன்னியே
யாகும் வேறிதற் கையுற வில்லையே. 71

## சூரியோதய வருணனை.

ததையுமலர்த் தாரண்ண லிவ்வண்ண மயலுழந்து தளரு மெல்வை
சிதையுமனத் திடருடைய செங்கமல முகமலரச் செய்ய வெய்யோன்

புதையிருளி னெழுகின்ற புகர்முகையா னையினுரிவைப்
போர்வை போர்த்த
உதயகிரி யெனுங்கடவு ளுதல் கிழித்த விழியேபோ
லுதயஞ் செய்தான். 72

இராமபிரான் திருப்பள்ளியெழுதல்

கொல்லாழி நீற்தங்கோர் குனிவயிரச் சிலைதடக்கைக்
கொண்ட கொண்டல்
எல்லாழித் தேரிரவி யிளங்கரத்தா லடிவருடி யனந்தல்
தீர்ப்ப
அல்லாழிக் கரைகண்டா னுயிரவாய் மணிவிளக்க
மழலுஞ் சேக்கைத்
தொல்லாழித் துயிலாதே துயராழி நெடுங்கடலுட்
டுயில்கின் றானே. 73

இராமனுதியர் சனகனது வேள்விச்சாலை சார்தல்.

ஊழிபெயர்ந் தெனக்கங்கு லொருவண்ணம் புடைபெயர
வுறக்க நீத்த
சூழியா னையினெழுந்து தொன்னியமத் துறைமுடித்துச்
சுருதி யன்ன
வாழிமா தவற்பணிந்து மனக்கினிய தம்பியொடும்
வம்பின் மாலை
தாழுமா மணிமௌலித் தார்ச்சனகன் பெருவேள்விச்
சாலை சார்ந்தான். 74

இராமலக்ஷ்மணர்களைச் சனகன் வினவ, முனிவன் கூறுதல்.

இருந்தகுலக் குமரர்தமை பிருகண்ணும் முகந்தழகு
பருக நோக்கி
அருந்தவனை யடிவணங்கி யாரிவரை யுரைத்திடுமி
னடிக ளென்ன
விருந்தினர்க ணின்னுடைய வேள்விகா ணியவந்தார்
வில்லுங் காண்பார்
பெருந் தகைமைத் தயரதன்றன் புதல்வரென வவர்
தகைமை பேச லுற்றான். 75

## 11. குலமுறைகிளத்துபடலம்.

### மனுவும் பிருதுவும்

ஆதித்தன் குலமுதல்வன் மனுவினையா ரறியாதார்
பேதித்த வுயிரனைத்தும் பெரும்பசியால் வருந்தாமல்

சோதித்தன் வரிசிலையா லிலமடந்தை முலைசுரப்பச்
சாதித்த பெருந்தகையு மிவர் குலத்தோர் தராபதி
காண். 1

## இட்சுவாகு மன்னவன்.

பிணியரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி
மணியரங்க நெடுமுடியாய் மலரயனை வழிபட்டுப்
பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாங்காண
அணியரங்கந்த ந்தானை யறியாதா ரறியாதார். 2

## ககுத்ஸ்தன்.

தான்றனக்கு வெலற்கரிய தானவரைத் தலைதுமித்து
வான்றரக்கிற் றிகொலென்று குறையிரப்ப வரங்
கொடுத்தாங்கு
ஏன்றெடுத்த சிலையினனு யிகல் புரிந்த விவர்குலத்தோர்
தோன்றலைப்பண் டிந்திரன்காண் விடையேறுய்ச்
சுமந்தானும். 3

## சிபிசக்ரவர்த்தி.

இன்னுயிர்க்கு மின்னுயிரா யிரு நிலங்காத் தாரென்று
பொன்னுயிர்க்குங் கழலவரை யாம்போலும்
புகழ்கிற்பாம்
'மின்னுயிர்க்கு நெடுவேலா யிவர்குலத்தோன்
மென்பறவை
மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாருக வழங்கினனல். 4

## பகீரதசக்ரவர்த்தி.

தூநின்ற சுடர்வேலோ யனந்தனே சொல்லானேல்
யானின்று புகழ்ந் துரைத்தற் கெளிதோவே
டவிழ்கொன்றைப்
பூநின்ற மவுலியையும் புக்களைந்த புனற்கங்கை
வானின்று கொணர்ந்தானு மிவர்குலத்தோர்
மன்னவன்காண் 5

## இரகுமகாராஜன்.

சந்திரனை வென்றுனு முருத்திரனைச் சாய்த்தானும்
துந்துவெனுந் தானவனைச் சுடுசரத்தாற் றுணித்தானும்
வந்தகுலத் திடைவந்த ரகுவென்பான் வரிசிலையால்
இந்திரனை வென்று திசையிருநான்குஞ் செருவென்றுன். 6

தசரதனும் அவன்புத்திரர் இவரென்பதும்.

யன்புதல்வன் றயரதனை யறியாதா ரில்லையவன்
யந்தகுலக் குமரரிவர் தமக்குள்ள பரிசெல்லாம்
யந்துரைத்துக் கரையேற நான்முகற்கு மரிதாம்பல்
ழியந்துவைத்த கடைத்தலையா யானறிந்த படிகேளாய். 7

இராமனது மகிமையை இங்ஙனம் முனிவன் கூறிமுடித்தல்.

கோதமன்றன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன்
போது நின்ற தெனப் பொலிந்த பொலன்கழற்காற்
பொடிகண்டாய்
காதலென்ற னுயிர்மேலு மிக்கரியோன் பாலுண்டால்
ஈதிவன்றன் வரலாறும் புயவலியு மெனவுரைத்தான். 8

## 12. கார்முகப்படலம்

கன்னியாசுற்கமாகத் தான் சிவதநுசை வைத்திருப்பதைச்
சனகமகாராசன் தெரிவித்தல்.

மாற்றமா றுரைப்பதென் மாய விற்குநாள்
தோற்றவா றெணமனந் துளங்கு கின்றதால்
நோற்றன ணங்கையு நொய்தி னையன்வில்
ஏற்றுமே லிடர்க்கட லேற்று மென்றனன். 1

சனகராசன் ஏவலாளரை யேவ அவர்கள் வில்வைத்துள்ள
இடத்தைநோக்கிச் செல்லுதல்.

என்றன னேன்றுதன் னெதிர்நின் ருரையக்
குன்றுறழ் வரிசிலை கொணர்மி னீண்டென
நன்றென வணங்கினர் நால்வ ரோடினர்
பொன்றிணி கார்முகச் சாலை புக்கனர். 2

அந்தச் சிவதனுசைப் பலர் சுமந்துவருதல்.

உறுவலி யானையை யொத்த மேனியர்
செறிமயிர்க் கல்லெனத் திரண்ட தோளினர்
அறுபதி னுயிர ரளவி லாற்றலர்
தறிமடுத் திரையிடத் தண்டிற் றூங்கினர். 3

சங்கொடு சக்கரந் தரித்த செங்கைய
சிங்கவே றல்லனே லிதனைத் தீண்டுவான்
எங்குள னொருவனின் றேற்றி னிச்சிலை
மங்கைதன் றிருமணம் வாழுமா லென்பார். 4

திண்ணெடு மேருவைத் திரட்டிற் றேவென்பார்
வண்ணவான் கடல்பண்டு கடைந்த மத்தென்பார்
அண்ணல்வா ளரவினுக் கரச னேவென்பார்
விண்ணிடு நெடியவில் வீழ்ந்த தோவென்பார். 5

என்னிது கொணர்கென வியம்பி னனென்பார்
மன்னவ ருளர்கொலோ மதிகெட் டானென்பார்
முன்னையூழ் வினையினுன் முடிக்கி லாமென்பார்
கன்னியு மிச்சிலை காணு மோவென்பார். 6

இச்சிலை யுதைத்தகோற் கிலக்க மியாதென்பார்
நச்சிலை நங்கைமே னட்டும் வேந்தென்பார்
நிச்சய மெடுக்குங்கோ னேமி யானென்பார்
சிற்சிலர் விதிசெய்த தீமை தானென்பார். 7

### சதாநந்தமுனிவன் கூறத் தொடங்குதல்.

போதக மனையவன் பொலிவு நோக்கியவ்
வேதனை தருகின்ற வில்லை நோக்கித்தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன் கூறன் மேயினன். 8

கார்முக வலிமையான் கழறல் வேண்டுமோ
வார்சடை யரனிகர் வரத நீயலால்
யாருள ரறிபவ ரிவற்குத் தோன்றிய
தேர்முக வல்குளால் செவ்வி கேளென்றே. 9

குணங்களையென் கூறுவது கொம்பினைச்சேர்ந்தவையுய்யப்
பிணங்குவன வழகிவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண்
கணங்குழையாள் தோன்றியபின் கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த வாறெத்தார் வேறுள்ளார். 10

அன்றுமுத லின்றளவ மாருமிந்தச் சிலை யருகு
சென்றுமில போயொளித்த தேர்வேந்தர் திரிந்துமிலர்
என்றுமினி மணமில்லை யென்றிருந்தே மிவனேற்றின்
நன்றுமலர்க் குழற்சீதை நலம்பழுதா காதென்றான். 11

### இராமன் சிவதநுசு உள்ளஇடத்தை யணுக எழுதல்.

பொழிந்தநெய் யாகுதி வாய்வழி பொங்கி
எழுந்த கொழுங்கன லென்ன வெழுந்தான்

ழிந்தது வில்லென விண்ணவ ரார்த்தார்
மொழிந்தன ராசிகண் முப்பகை வென்றூர். 12

### மங்கையரின் மனப்பாங்கு.

தூய தவங்க டொடங்கிய தொல்லோன்
ரயவன் வல்வி லிறுப்பதன் முன்னம்
சேயிழை மங்கையர் சிந்தைதொ றெய்யா
ஆயிரம் வில்லை யனங்க னிறுத்தான். 13

கரங்கள் குவித்திரு கண்கள் பனிப்ப
இருங்களி றிச்சிலை யேற்றில னயின்
நரந்த நறைக்குழ னங்கையு நாமும்
முருங்கெரி யிற்புக மூழ்குது மென்பார். 14

வள்ளன் மனத்தை மகிழ்ந்தன னென்றூல்
கொள்ளென முன்பு கொடுப்பதை யல்லால்
வெள்ள மனைத்தவன் வில்லை யெடுத்திப்
பிள்ளைமு னிட்டது பேதைமை யென்பார். 15

ஞான முனிக்கொரு நாணிலை யென்பார்
கோனிவ னிற்கொடி யோனிலை யென்பார்
மானவ னிச்சிலை கால்வளை யானேல்
பீன தனத்தவள் பேறில ளென்பார். 16

### இராமபிரான் வில்லினிடத்திற்கு நடத்தல்.

தோகைய ரின்னன சொல்லிட நல்லோர்
ஓகை விளம்பிட வும்ப ருவப்ப
மாக மடங்கலு மால்விடை யும்பொன்
நாகமு நாகமு நாண நடந்தான். 17

### இராமபிரான் அவ்வில்லை முறித்ததனூற் பேரோசை தோன்றுதல்.

தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்
மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார்
கடுப்பினி லியாரு மறிந்திலர் கையான்
எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார். 18

### அந்நகரத்தார் பேருவகைகொண்டு கூறியன.

தயரதன் புதல்வ னென்பார் தாமரைக் கண்ண
னென்பார்
புயலிவன் மேனி யென்பார் பூவையும் பொருவு
மென்பார்

மயலுடைத் துலக மென்பார் மானுட னல்ல னென்பார்
கயல்பொரு கடலுள் வைகுங் கடவுளே காணு
மென்பார். 19

நம்பியைக் காண நங்கைக் காயிர நயனம் வேண்டும்
கொம்பினைக் காணுந் தோறுங் குரிசிற்கு மன்னதே யால்
தம்பியைக் காண்மினென்பார் தவமுடைத்துலக
மென்பார்
இம்பரிந் நகரிற் றந்த முனிவனை யிறைஞ்சு மென்பார். 20

சீதை பளிக்குமாடத்து மற்றோர் மலரணையிற் சேர்தல்.

ஊசலா டுயிரி னோடு முருகுபூம் பள்ளி நீங்கிப்
பாசிழை மகளிர் சூழப் போயொரு பளிக்கு மாடக்
காசிறு மரையின் பொய்கைச் சந்திர காந்த மீன்ற
சீதநீர் தெளித்த மென்பூஞ் சேக்கையை
யரிதிற்சேர்ந்தாள். 21

பிரிவித்துயரால் சீதை பலவகையாக இரங்குதல்

நாணுலாவு மேருவோடு நாணுலாவு பாணியும்
தூணுலாவு தோளும் வாளி யூடுலாவு தூணியும்
வாணிலாவி னூலுலாவு மாலைமார்பு மீளவும்
காணலாகு மாகினுவி காணலாகு மேகொலாம். 22

விண்டலங் கலந்திலங்கு திங்களோடு மீதுசூழ்
வண்டலம் பலங்கறங்கு பங்கியோடும் வார்சிலைக்
கொண்டலொன் றிரண்டுகண்ணின் மொண்டுகொண்
டென்னுவியை
உண்டதுண்டெ னெஞ்சினின்று முண்டதென்று
முண்டரோ. 23

பஞ்சரங்கு தீயினுவி பற்றிநீடு கொற்றவில்
வெஞ்சரங்க ணெஞ்சரங்க வெய்யகாம னெய்யவே
சஞ்சலங்க லந்தபோது தையலாரை யுய்யவந்து
அஞ்சலஞ்ச லென்கிலாத வாண்மை
யென்னவாண்மையோ. 24

இளைக்கலாத கொங்கைகா ளெழுந்துவிம்மி யென்செய்தீர்
முளைக்கலா மதிக்கொழுந்து போலும்வான் முகத்தினன்
வளைக்கலாத விற்கையாளி வள்ளன்மார்பி னுள்ளுறத்
திளைக்கலாகு மாகிலான செய்தவங்கள் செய்ம்மினே. 25

எங்குநின் றெழுந்ததிந்த விந்து வந்தெ னெஞ்சுலா
அங்கியன் றனங்கனெய்த வம்பின்வந்த சிந்தைநோய்

பொங்குகின்ற கொங்கைமேல் விடம்பொழிந்த
தென்னினும்
கங்குல்வந்த திங்களன் றகங்களங்க மில்லையே. 26

அடர்ந்துவந் தனங்கனெஞ் சழன்றுசிந்து மப்பெனும்
விடங் குடைந்த மெய்யினின்று வெந்திடா
தெழுந்துவெங்
கடந்துதைந்த காரியானை யன்னகாளை தாளடைந்து
உடன்றொடர்ந்து போனவாயி வந்தவாவெ னுள்ளமே. 27

விண்ணுளே யெழுந்தமேக மார்பினூலின் மின்னொடும்
மண்ணுளே யிழிந்ததென்ன வந்துபோன மைந்தனார்
எண்ணுளே யிருந்தபோதும் யாவரென்று தேர்கிலேன்
கண்ணுளே யிருந்தபோது மென்கொல்
காண்கிலாதவே. 28

பெய்கடற் பிறந்தயல் பெறற்கொணு மருந்து பெற்று
ஐயபொற் கலத்தொடங்கை விட்டிருந்த வாதர்போல்
மொய் கிடக்கு மண்ணனூண் முயங்கிடாது முன்னமே
கைகடக்க விட்டிருந்து கட்டுரைப்ப தென்கொலோ. 29

## நீலமாலையென்ற சேடியொருத்தி சீதையுள்ளவிடம் வருதல்.

வடங்களுங் குழைகளும் வான வில்லிடத்
தொடர்ந்து பூங்குழல்களும் துகிலுஞ் சோர்தர
நுடங்கிய மின்னென நொய்தி னெய்தினள்
நெடுந்தடங் கிடந்தகண் ணீல மாலையே. 30

மராமர மிவையென வளர்ந்த தோளினன்
அராவணை யமலனென் றயிர்க்கு மாற்றலான்
இராமனென் பதுபெய ரிளைய கோவொடும்
பராவரு முனியொடும் பதிவந் தெய்தினன். 31

மாத்திரை யளவிற்றாண் மடுத்து முன்பயில்
சூத்திர மிதுவெனத் தோளின் வாங்கினன்
ஏத்தின ரிமையவ ரிழிந்த பூமழை
வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே. 32

## சீதை சிறிது ஐயம் நீங்குதல்

கோமுனி யுடன்வரு கொண்ட லென்றபின்
தாமரைக் கண்ணினு னென்ற தன்மையால்
ஆமவ னேகொலென் றைய நீங்கினள்
வாமமே கலையிற வளர்ந்த தல்குலே. 33

### சீதையின் உறுதி.

இல்லையே நுசுப்பென்பா ருண்டுண் டென்னவும்
மெல்லியன் முலைகளும் விம்ம விம்முவாள்
சொல்லிய குறியினத் தோன்ற லேயவன்
அல்லனே லிறப்பனென் றகத்து ளுன்னினாள். 34

### சனகராசன் முனிவனிடம் கூறியமொழி

உரைசெயெம் பெருமவுன் புதல்வன் வேள்விதான்
விரைவினின் றொருபகன் முடித்தல் வேட்கையோ
முரசெறிந் ததிர்கழன் முழங்கு தானையவ்
வரசையு மிவ்வழி யழைத்தல் வேட்கையோ. 35

### விசுவாமித்திரன் மொழிப்படி தசரதனுக்குச் சனகன் தூது அனுப்பல்.

மல்வலா னவ்வுரை பகர மாதவன்
ஒல்லையி லவனும்வந் துறுத னன்றென
எல்லையி லுவகையா னியைந்த வாறெலாம்
சொல்லுகென் றோலையுந் தூதும் போக்கினான். 36

## 13. எழுச்சிப்படலம்

### சனகராசன்தூதர் தசரதசக்கரவர்த்தியி னரண்மனைவாயிலை யடைதல்.

கடுகிய தூதருங் காலிற் காலிற்சென்று
அடிகுரன் முரசதி ரயோத்தி யெய்தினார்
அடியிணை தொழவிட மின்றி மன்னர்தம்
முடியொடு முடிபொரு வாயின் முன்னினார். 1

### தூதுவர் ஓலை கொடுக்க, சக்கரவர்த்தி 'வாசிக்க' எனல்.

கூறிய தூதருங் கொணர்ந்த வோலையை
ஈறில்வண் புகழினா யிதுவ தென்றனர்
வேறொரு புலமகன் விரும்பி வாங்கினான்
மாறதிர் கழலினான் வாசி யென்றனன். 2

### தசரதமன்னவன் மொழி.

வெற்றிவேன் மன்னவன் தக்கன் வேள்வியில்
கற்றைவார் சடைமுடிக் கணிச்சி வானவன்
முற்றவே முலகையும் வென்ற மூரிவில்
இற்றபே ரொலிகொலன் றிடித்த தீங்கென்றான். 3

## சக்கரவர்த்தி தன்சேனை முதலியன முந்திச்செல்லும்படி பறைசாற்றுமாறு கட்டளையிடல்.

வானவன் குலத்தெமர் வரத்தி னல்வரும்
வேனில்வே ளிருந்தவம் மிதிலை நோக்கிநஞ்
சேனையு மரசருஞ் செல்க முந்தென
ஆனைமே லணிமுர சறைகென் றேவினான். 4

## சேனை யெழுதல்.

விடைபொரு நடையினான் சேனை வெள்ளமோர்
இடையிலை யுலகினி லென்ன வீண்டிய
கடையுக முடிவினி லெவையுங் காற்படப்
புடைபெயர் கடலென வெழுந்து போயதே. 5

## தசரதசக்கரவர்த்தியின் சேனைப்பெருக்கம்.

உழுந்திட விடமிலை யுலக மெங்கணும்
அழுந்திய வுயிர்க்கெலா மருட்கொம் பாயினான்
எழுந்தில னெழுந்திடைப் படருஞ் சேனையின்
கொழுந்துபோய்க் கொடிமதின் மிதிலை கூடிற்றே. 6

## அந்தணர் செல்லுதல்.

குடையர் குண்டிகை தூக்கினர் குந்திய
நடையர் நாசி புதைத்தகை நாற்றலர்
கடக ளிற்றையுங் காரிகை யாரையும்
அடைய வஞ்சிய வந்தணர் முந்தினார். 7

## வசிட்டமுனிவன் செல்லுதல்.

செவிவயி னமுதக் கேள்வி தெவிட்டினார் தேவர் நாவின்
அவிகையி னளிக்கு நீரா ராயிரத் திரட்டி சூழக்
கவிகையி னீழற் கற்பி னருந்ததி கணவன் முத்துச்
சிவிகையி னன்ன மூருந் திசைமுக னென்னச்
சென்றான். 8

## பரதசத்துருக்கனர் வசிட்டமுனிவன்பின்னே செல்லுதல்

பொருகளி றிவுளி பொற்றேர் பொலங்கழற் குமரர் முந்நீர்
அருவரை சூழ்ந்த தென்ன வருகுமுன் பின்னுஞ் செல்லத்
திருவளர் மார்பர் தெய்வச் சிலையினர் தோர் வீரர்
இருவரு முனிபின் போன விருவரு மென்னப் போனார். 9

**தசரதசக்கரவர்த்தி புறப்படுதல்.**

நித்திய நியம முற்றி நேமியான் பாதஞ் சென்னி
வைத்தபின் மறைவல் லோர்க்கு வரப்பறு மணியும் பொன்னும்
பத்தியா னிரையும் பாரும் பரிவுட னல்கிப் போனான்
முத்தணி வயிரப் பூணான் மங்கல முகூர்த்த நன்னாள். 10

**சேனையுடன் சக்கரவர்த்தி சந்திரசயிலத்தின் சாரலில் தங்குதல்.**

இன்னண மேகி மன்னன் யோசனை யிரண்டு சென்றான்
பொன்வரை போலுமிந்து சயிலத்தின் சாரல் புக்கான்
மன்மதக் களிறும் மாதர் கொங்கையும் மார னம்புந்
தென்வரைச் சாந்தும்நாறுஞ் சேனையு மிறுத்த தன்றே 11

## 14. வரைக்காட்சிப்படலம்

**வழிவந்தஇளைப்பினால் மங்கையர் பளிக்குப்பாறையில் துயிலுதல்**

தளங்கொ டாமரை யெனத்தளி ரடியினு முகத்தும்
வளங்கொண் மாலைவண் டலமர வழிவருந் தினராய்
விளங்கு தம்முருப் பளிங்கிடை வெளிப்பட வேறோர்
துளங்கு பாறையிற் றோழிய ரயிர்த்திடத் துயின்றார். 1

**குதிரைகள் படிந்த புழுதியை யுதறிவிட்டு நிற்றல்.**

தீயவரோ டொன்றிய திறத்தரு நலத்தோர்
ஆயவரை யந்நிலை யறிந்தனர் துறந்தாங்கு
ஏயவரு நுண்பொடி படிந்துட னெழுந்தொண்
பாய்பரி விரைந்துதறி நின்றன பரந்தே. 2

**சிறிது தோண்ட ஆற்றில் ஊற்றுநீர் தோன்றுதல்.**

வெள்ளநெடு வாரியுற வீசியில வேனும்
கிள்ளவெழு கின்றபுனல் கேளிரின் விரும்பித்
தெள்ளுபுன லாறுசிறி தேயுதவு கின்ற
உள்ளது மருதுதவு வள்ளலையு மொத்த. 3

**மதயானைகள் நீர்நிலையைவிட்டு ஏறாமை.**

ஒக்கநெறி யுய்ப்பவ ருரைத்தகுறி கொள்ளா
பக்கமின மொய்க்கய லலைக்கநனி பாரா
மைக்கரி மதத்த விலைமாதர் கலையல்குற்
புக்கவரை யொத்தன புனற்சிறைக ளேறா. 4

### சந்திரசைல வருணனை

குப்புறற் கருமை யாலக் குலவரைச் சாரல் வைகி
ஒப்புறத் துளங்கு கின்ற வுடுபதி யாடி யின்கண்
இப்புறத் தேயுங் காண்பார் குறத்திய ரியைந்த கோலம்
அப்புறத் தேயுங் காண்பா ரரம்பைய ரழகு மாதோ. 5

சரம்பயில் சாபமன்ன புருவங்க டம்மி னூடா
நரம்பினோ டினிது பாடி நாடக மயிலோ டாடும்
அரம்பையர் வெறுத்து நீத்த வவிர்மணிக் கோவை யாரம்
மரம்பயில் கடுவன் பூண மந்திகண் டுவக்கு மாதோ. 6

நிலமகட் கணிக ளென்ன நிரைக்கதிர் முத்தஞ் சிந்தி
மலைமகள் கொழுநன் சென்னி வந்துவீழ் கங்கை மான
அலகில்பொன் னலம்பி யோடி யாரஞ்சே ரருவி மாலை
உலகளந் தவன்றன் மார்பி னுத்தரீ கத்தை யொத்த. 7

ஆக மாலைய மாகவு ளாள்பொலி
வாக மாலை யுளாரென லாகுமால்
மேக மாலை மிடைந்தன மேலெலாம்
மேக மாலை கிடந்தது கீழெலாம். 8

### அந்திக்கால வருணனை.

மஞ்சார் மலைவாரண மொத்தது வானி னோடும்
வெஞ்சாயை யுடைக்கதி ரங்கதன் மீது பாயும்
பஞ்சா னனமொத்தது மற்றது பாய வூறும்
செஞ்சோரி யெனப்பொலி வுற்றது செக்கர் வானம். 9

### சந்திரசைல வருணனை.

கண்ணுக் கினிதாகி விளங்கிய காட்சியாலும்
எண்ணற் கரிதாகி யிலங்கு சிரங்க ளாலும்
வண்ணக் கொழுஞ்சந் தனஞ்சேர்ந்தது மார்ப ணிந்த
அண்ணற் கரியோன் றனை யொத்ததவ் வாசில் குன்றம். 10

### தசரதருடன்வந்த ஆடவரும் மகளிரும் மலையில்தங்குதல்.

ஊனும் முயிரு மனையார் ரொருவர்க் கொருவர்
தேனும் மிஞிறுஞ் சிறுதும்பியும் பம்பி யார்ப்ப
யானை யினமும் பிடியும் மிகலாளி யேறும்
மானுங் கலையும்மென மால்வரை வந்தி ழிந்தார். 11

### இருள் பரத்தல்.

கால்வா னகத் தேருடை வெய்யவன் காய்க டுங்கண்
கோன்மாய் கதிர்ப்புல்லுளைக் கொல்சினக் கோள ரிம்மா
மேல்பான் மலையிற் புக்வீங்கிருள் வேறி ருந்த
மால்யானை யீட்டம்மென வந்து பரந்த தன்றே. 12

### தீபமேற்றப்படுதல்.

மந்தார முந்து மகரந்த மணங்கு லாவும்
அந்தா ரரசர்க் கரசன்ற னைக வெள்ளம்
நந்தா தொலிக்குந் நரலைப்பெரு வேலை யெல்லாம்
செந்தா மரைபூத்தெனத் தீப மெடுத்த வன்றே. 13

### நட்சத்திரம் புடைசூழச் சந்திரன் விளங்குதல்.

தண்ணற் கடலிற் றளிசிந்து தரங்க நீங்கி
விண்ணிற் சுடர்வெண் மதிவந்தது மீன்கள் சூழ
வண்ணக் கதிர் வெண் ணிலவீன்றென வாலு கத்தூடு
ஒண்ணித்தில மீன்றுளிர் வால்வளை யூர்வ தொத்தே. 14

### கங்குல் கழித்த வகை

உண்ணு வமுதன்ன கலைப்பொரு ளுள்ள துண்டும்
பெண்ணு ரமுதம் மனையார்மனத் தூடல் பேர்த்தும்
பண்ணூர்ந்த பாடல் செவிமாந்திப் பயன்கொ ளாடல்
கண்ணு னினிதுய்க்கவுங் கங்குல் கழிந்த தன்றே. 15

## 15. பூங்கொய் படலம்

### சூரியோதயவருணனை.

மீனுடை யெயிற்றுக் கங்குற் கனகனை வெகுண்டு வெய்ய
கானுடைக் கதிர்க ளென்னு மாயிரங் கரங்க ளோச்சித்
தானுடை யுதய மென்னுந் தமனியத் தறியி னின்று
மானுட மடங்க லென்னத் தோன்றினன் வயங்கு
வெய்யோன். 1

### மன்னவன் சேனையுடன் சோணையாற்றையடைதல்.

முறையெலா முகுத்த பின்னர் மன்னனு மூரித் தேர்மேல்
இறையெலாம் வணங்கப் போனு னெழுந்துடன் சேனை
வெள்ளம்
குறையெலாஞ் சோலை யாகிக் குழியெலாங் கழுநீ ராகித்
துறையெலாங் கமல மான சோணையா றடைந்த
தன்றே. 2

## சூரியனுச்சியடைய, அரசர்முதலியோர் ஆங்குச்சோலை சேர்தல்.

புடைந்தவ ணிறுத்த பின்ன ரருக்கனு மும்பர்ச் சார
மடந்தையர் குழாங்க ளோடு மன்னரு மைந்தர் தாமும்
நடைந்துவண் டுறையு மென்பூக் கொய்தினி தாடமைதீர்
நடங்களு மடுவுஞ் சூழ்ந்த தண்ணறுஞ் சோலை
சார்ந்தார். 3

## குயில்கள் நாணி யொடுங்குதல்.

பாசிழைப் பரவை யல்குல் பண்டரு கிளவி தண்டேன்
மூசிய கூந்தன் மாதர் மொய்த்தபே ரமலை கேட்டுக்
கூசின வல்ல பேச நாணின குயில்க ளெல்லாம்
வாசகம் வல்லார் முன்னின் றியாவர்வாய் திறக்க
வல்லார். 4

## மகளிர் மலர்பறிக்குமாறு கொம்புகளைத் தாழ்த்த, அம்மலர்க்கொம்புகள் பூச்சொரிந்தவண்ணம் தாழ்தல்.

நஞ்சினுங் கொடிய நாட்ட மமுதென நயந்து நோக்கிச்
செஞ்செவே கமலக் கையாற் றீண்டலு நீண்ட கொம்பர்
தஞ்சிலம் படியின் மென்பூச் சொரிந்துடன் றாழ்ந்த
வென்றால்
வஞ்சிபோன் மருங்கு லார்மாட் டியாவரே வணங்க
லாதார். 5

அம்புயத் தணங்கி னன்ன ரம்மலர்க் கைகடீண்ட
வம்பிய லலங்கற் பங்கி வாளரி மருளுங் கோளார்
தம்புய வரைகள் வந்து தாழ்வன தளிர்த்த மென்பூங்
கொம்புக டாழு மென்றல் கூறலாந் தகைமைத்
தொன்றே. 6

## வண்டுகள் மகளிரிடத்து மொய்த்தல்.

நதியினுங் குளத்தும் பூவா நளினங்கள் குவளை யோடு
மதிநுதல் வல்லி பூப்ப நோக்கிய மழலைத் தும்பி
அதிசய மெய்திப் புக்கு வீழ்ந்தன வலைக்கப் போகா
புதியன கண்ட போழ்து விடுவரோ புதுமை பார்ப்பார். 7

## ஒரு மாதின் ஊடல்.

செம்மாந்த தெங்கின் னிளநீரையொர் செம்ம லேக்கி
அம்மாவிவை மங்கையர் கொங்கையி னுய வென்ன

எம்மாதர் கொங்கைக் கிவையொப்பன வென்றெ ரேழை
விம்மா வெதும்பா வெயரா முகம் வெய்து யிர்த்தாள். 8

**மாற்றவள்பேரைக் கணவன்கூற ஒருத்திகொண்ட வருத்தம்.**

தைக்கின்ற வேனேக்கின டன்னுயி ரன்ன மன்னன்
மைக்கொண்ட கண்ணுளெதிர் மாற்றவள் பேர்விளம்ப
மெய்க்கொண்ட மானந் தலைக்கொண்டிட விம்மி
மென்பூக்
கைக்கொண்டு மோந்தா ளுயிர்ப்புண்டு கரிந்த தன்றே. 9

**மாதர்களின் அழகின் சிறப்பு**

ஊக்க முள்ளத் துடைய முனிவரால்
காக்க லாவது காமன்கை வில்லெனும்
வாக்கு மாத்திர மல்லது வல்லியிற்
பூக்கொய் வாள்புரு வக்கடை போதுமே. 10
சிலையின் மேலிருந் தானுருத் தேவரால்
வளைய வும்மரி யாள்வனப் பின்றலை
நினைவு நோக்கமு நீக்கலன் கைகளால்
தனையு நாண்முறி யுங்கொய்து நல்கினுன். 11

**யாவரும் புனல்விளையாட்டுக்குச் செல்ல எண்ணுதல்**

ஏயுந் தன்மைய ரிவ்வகை யாரெலாம்
தூய தண்ணிழற் சோலைத் துறுமலர்
வேயுஞ் செய்கை வெறுத்தனர் வெண்டிரை
பாயுந் தீம்புனர் பண்ணைசென் றெய்தினர் 12

## 16. புனல்விளையாட்டுப் படலம்

**மகளிரும் ஆடவரும் நீர்நிலையை நோக்கிவருதல்**

புனைமலர்த் தடங்க ளோக்கிப் பூசல்வண் டார்த்துப்
பொங்க
வினையறு துறக்க நாட்டு விண்ணவர் கணமு நாண
அனகரு மணங்க ளுருமம்மலர்ச் சோலை நின்று
வனகரி பிடிகளோடு வருவன வென்ன வந்தார். 1

**மகளிர் விளையாடுமாறு நீரில் மூழ்கியதன் வருணனை.**

அங்கவர் பண்ணை நன்னீ ராடுவா னமைந்ததோற்றம்
கங்கைவார் சடையோ னன்ன மாமுனி கனல மேனள்

மங்கையர் கூட்டத் தோடும் வானவர்க் கிறைவன் செல்வம்
பொங்குபாற் கடலிற் செல்லுந் தோற்றமே போன்ற தன்றே. 2

தேனகு நறவ மாலை செறிகுழற் றெய்வ மன்னாள்
தானுடைக் கோல மேனி தடத்திடைத் தோன்ற நோக்கி
நானக நகுகின் றாளிந் நன்னுத லாழி யாமென்று
ஊனமில் முலையினார முளங்குளிர்ந் துதவு வாளும். 3

பொற்றொடி தளிர்க்கைச் சங்கம் வண்டொடு புலம்பி யார்ப்ப
எற்றுநீர்க் குடையுந் தோறு மேந்துபே ரல்கு லின்று
கற்றைமே கலைக ணீங்கிச் சீறடி கவ்வக் காலிற்
சுற்றிய நாக மென்று துணுக்கத்தாற் றுடிக்கின் றாரும். 4

## மகளிர் நீராடுதலினால் மீனும் கமழ்தல்.

ஆன தூயவ ரோடுட னாடினார்
ஞான நீரவ ராகுவர் நன்றரோ
தேனு நாவியுந் தேக்ககி லாவியும்
மீனு நாறின வேறினி வேண்டுமோ. 5

## ஆடவரும் மகளிரும் ஊடிய புனலின் வருணனை.

மிக்க வேந்தர்த மெய்தனி சாந்தொடும்
புக்க மங்கையர் குங்குமம் போர்த்தலால்
ஒக்க நீல முகிற்றலை யோடிய
செக்கர் வானக மொத்ததத் தீம்புனல். 6

## சூரியாத்தமன வருணனை.

மானி னோக்கியர் மைந்தரொ டாடிய
ஆன நீர்விளை யாடலை நோக்கினான்
தானு மன்னது காதலித் தானென
மீன வேலையை வெய்யவ னெய்தினான். 7

## சந்திரோதய வருணனை.

ஆற்ற லின்மையி னாலழிந் தேயுந்தம்
வேற்று மன்னர்த மேல்வரும் வேந்தர்போல்
ஏற்று மாதர் முகங்களொ டெங்கணுந்
தோற்ற சந்திரன் மீளவுந் தோற்றினான். 8

# 17. உண்டாட்டுப்படலம்

## நிலாப் பரத்தலின் வருணனை.

வெண்ணிற நறைநிறை வெள்ள மென்னவும்
பண்ணிறஞ் செறிந்திடப் பரந்த தென்னவும்
உண்ணிறை காமமிக் கொழுகிற் றென்னவும்
தண்ணிறை நெடுநிலாத் தழைத்த தெங்குமே. 1

## மகளிர் முத்துப்பந்தர் முதலிய இடத்துச் சேர்தல்.

துயங்கு தாரகைபுரை தரள நீழலும்
இயங்கு கார் மிடைந்த கா வெழினிச் சூழலும்
கயங்கள்போன் றொளிர்பளிங் கடுத்த கானமும்
வயங்குபூம் பந்தரு மகளி ரெய்தினர். 2

## உண்ட கள் காமத்தை மூட்டுதல்.

தாமமு நானமுந் ததைந்த தண்ணகில்
தூமமுண் குழலிய ருண்ட தூநறை
ஓமவெங் குழியுகு நெய்யி னுள்ளுறை
காமவெங் கனலினைக் கனற்றிக் காட்டிற்றே. 3

## மதுவினுள் தன்முகந்தோன்ற மயங்கிய ஒருத்தி கூறல்.

அச்சநுண் மருங்கு லாளோ ரணங்கனை ளளக பந்தி
நச்சுவேற் கருங்கட் செவ்வாய் நகைமுக மதுவுட்
டோன்றப்
பிச்சிநீ யென்செய் தாயிப் பெருநற விருக்க வாளா
எச்சிலை நுகர்தி யோவென் றெயிற்றரும் பிலங்க
நக்காள். 4

## ஒருத்தி கள்ளினுள்ளே தோன்றுஞ் சந்திரனுக்கு அறிவுறுத்தல்.

களித்தகண் மதர்ப்ப வாங்கோர் கனங்குழை கள்ளி
னுள்ளால்
வெளிப்படு கின்ற காட்சி வெண்மதி நிழலை நோக்கி
அளித்தன னபயம் வானத் தரவினை யஞ்சி நீவந்து
ஒளித்தனை யஞ்ச லென்றாங் கினியன வுணர்த்து
கின்றாள் 5

### ஒருத்தி நிலவை மதுவென்று மயங்கிக் கிண்ணத்தில் ஏற்க முயலுதல்.

அழிகின்ற வறிவி னாலோ பேதைமை யாலோ வாற்றிற்
சுழியொன்றி நின்ற தன்ன வுந்தியா ளொருத்தி செந்தேன்
பொழிகின்ற பூவின் வேய்ந்த பந்தரைப் புரைத்துக் கீழ்வந்து
இழிகின்ற கொழுதி லாவை நறவென வள்ளத் தேற்றாள். 6

### ஒருத்தி வெறுங்கிண்ணத்தை வாயிதழில்வைத்துக் கொள்ளல்.

எள்ளொத்த கோல மூக்கி னேந்திழை யொருத்தி முன்கை
தள்ளத்தண் ணறவை யெல்லாந் தவிசிடை யுகுத்துந் தேறாள்
உள்ளத்தின் மயக்கந் தன்னா லுட்புறத் துண்டென் றெண்ணி
வள்ளத்தை மறித்து வாங்கி மணிநிற விதழின் வைத்தாள். 7

உய்த்தபூம் பள்ளியி னூட நீங்குவான்
சித்தமுண் டொருத்திக்க தன்பன் றேர்கிலான்
பொய்த்ததோர் மூரியா னிமிர்ந்து போக்கினாள்
எத்தனை யிறந்தன கடிகை யீண்டென்றாள். 8

சினங்கெழு வேற்கையோர் செம்மல் பாலொரு
கனங்குழை மயிலனாள் கடிது போயினாள்
மனங்குழை நறவமோ மாலை தான்கொலோ
அனங்கனோ யார்கொலோ வழைத்த தூதரே. 9

கொள்ளைப்போர் வாட்கண்ணாளங் கொருத்தியோர் குமர னன்னான்
வள்ளற்றா ரகலந் தன்னை மலர்க்கையாற் புதைப்ப நோக்கி
உள்ளத்தா ருயிரன் னாண்மே லுதைபடு மென்று நீர்நும்
கள்ளத்தாற் புதைத்தீ ரென்னா முன்னையிற் கனன்று மிக்காள், 10

துனியுறு புலவியைக் காதல் சூழ்சுடர்
பனியெனத் துடைத்தலும் பதைக்குஞ் சிந்தையாள்

புனையிழை யொருமயில் பொய்யு றங்குவாள்
கனவெனு நலத்தினூற் கணவற் புல்லினள். 11

சந்திரனத்தமித்தலும், சூரியனுதித்தலும்.

கடையுற நன்னெறி காண்கி லாதவர்க்கு
இடையுறு திருவென விந்து நந்தினன்
படர்திரைக் கருங்கடற் பரமன் மார்பிடைச்
சுடர்மணிக் கரசென விரவி தோன்றினன். 12

## 18. எதிர்கொள்படலம்

தசரதன் சேனையுடன் கங்கையை யடைதல்.

அடாநெறி யறைதல் செல்லா வருமறை யறைந்த நீதி
விடாநெறிப் புலமைச் செங்கோல் வெண்குடை வேந்தர் வேந்தன்
படாமுக மலையிற் றேன்றும் பருவமொத் தருவி பல்கும்
கடாநிறை யாறு பாயுங் கடலொடுங் கங்கை சேர்ந்தான். 1

சனகராசன் தசரதசக்கரவர்த்தியை எதிர்கொள்ள எழுதல்.

வந்தன னரச னென்ன மனத்தெழு முவகை பொங்கக்
கந்தடு களிறும் தேரும் கலினமாக் கடலுஞ் சூழச்
சந்திர னிரவி தன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற
இந்திர திருவன் றன்னை யெதிர்கொள்வா னெழுந்து வந்தான். 2

சேனை யெழுப்பிய தூளி.

சூழுமா கடல்களுந் திடர்படத் துகடவழ்ந்து
ஏழுபா ரகமுமுற் றுளதெனற் கெளிதரோ
ஆழியா னுலகளந் தன்றுதாள் சென்றவப்
பூழையூ டேபொடித் தப்புறம் போயதே 3

தசரதசக்கரவர்த்தியின் சேனையிடம் சனகமன்னன்
சேனைவந்து சேர்தல்.

மாறிலா மதுகையான் வருபெருந் தானைமேல்
ஊறுபே ருவகையா னனிகம்வந் துற்றபோது
ஈறிலோ தையினெடும் மெறிதிரைப் பரவைமேல்
ஆறுபாய் கின்றதோ ரமலைபோ லானதே. 4

### சனகன் தேரினின்றிறங்கித் தசரதனைச் சார, அம்மன்னவன் சனகனைத் தழுவுதல்.

எய்தவந் திருநெடுந் தேரிழிந் தினியதன்
மொய்கொடிண் சேனையின் னிற்கமுன் சேறலும்
கையின்வந் தேறெனக் கடிதின்வந் தேறினான்
ஐயனும் முகமலர்ந் தகமுறத் தழுவினான். 5

### சனகனைச் சேமம் விசாரித்துத் தசரதன் மிதிலைசேர்தல்.

தழுவிநின் றவனிருங் கிளையையுந் தமரையும்
வழுவில்சிந் தனையினான் வரிசையின் னளவளாய்
எழுகமுந் துறவெனா வினிதுவந் தெய்தினான்
உழுவைமுந் தரியனா னெவரினும் முயரினான். 6

### இராமன் எதிர்கொண்ட வகை.

தம்பியுந் தானுமத் தானைமன் னவனகர்ப்
பம்புதிண் பரவியும் படைஞரும் புடைவரச்
செம்பொனிற் பசுமணித் தேரின்வந் தெய்தினான்
உம்பரும் மிம்பரும் முரகருந் தொழவுளான். 7

### இராமன் தசரதனை யணுகுதல்.

காவியுங் குவளையுங் கடிகொள்கா யாவுமொத்து
ஓவியஞ் சவிகெடப் பொலிவதோ ருருவொடே
தேவருந் தொழுகழற் சிறுவன்முன் பிரிவதோர்
ஆவிவந் தென்னவந் தரசன்மா டணுகினான். 8

### இராமன்தாயாரைவணங்க அவர்பெருமகிழ்ச்சி கொளல்.

கற்றைவார் சடையினான் கைக்கொளுந் தனுவிறக்
கொற்றநீள் புயநிமிர்த் தருளுமக் குரிசில்பின்
பெற்றதா யரையுமப் பெற்றியிற் றொழுதெழுந்து
உற்றபோ தவர்மனத் துவகையா ருரைசெய்வார். 9

### தசரதன் தனதுசேனை முதலியவற்றை முற்கொண்டு செல்லுமாறு இராமனுக்குப் பணிதல்.

சான்றெனத் தகையசெங் கோலினா னுயிர்கடாம்
ஈன்றநற் றாயெனக் கருதுபே ரருளினான்
ஆன்றவிச் செல்வமித் தனையுமொய்த் தருகுறத்
தோன்றலைக் கொண்டுமுற் செல்கெனச்
சொல்லினான். 10

**தம்பியர்மருங்கு தொடர்ந்துவர, இராமன்தேர்மேற் செல்லுதல்.**

தொழுதிரண் டருகுமன் புடையதம் பியர்தொடர்ந்து
அழிவில்சிந் தையினுவந் தாடன்மா மிசைவரத்
தழுவுசங் கொடுநெடும் பணைதழங் கிடவெழுந்து
எழுதருந் தகையதோர் தேரின்மே லேகினான். 11

**இராமன் மிதிலைநகர் வீதியிலெய்துதல்.**

பஞ்சிசூழ் மெல்லடிப் பாவைமார் பண்ணைசூழ்
மஞ்சுசூழ் நெடியமா ளிகையின்வந் திடைவிராய்
நஞ்சுசூழ் விழிகள்பூ மழையின்மேல் விழநடந்து
இஞ்சிசூழ் மிதிலைமா வீதிசென் றெய்தினான். 12

**மகளிர் அடைந்த நிலையைக் கூறுவோமெனல்**

பேதைமார் முதல்கடைப் பேரிளம் பெண்கடாம்
ஏதியார் மாரவே ளேவவந் தெய்தினார்
ஆதிவா னவர்பிரா னணுகலா லணிகொள் கார்
ஓதியார் வீதிவா யுற்றவா றுரைசெய்வாம். 13

## 19. உலாவியற்படலம்

**மகளிர் எங்கும் மொய்த்தல்.**

மானினம் வருவ போன்றும் மயிலினந் தரிவ போன்றும்
மீனின மிளிர்வ போன்றும் மின்னின மிடைவ போன்றும்
தேனினஞ் சிலம்பி யார்ப்பச் சிலம்பினம் புலம்ப
வெங்கும்
பூதனை கூந்தன் மாதர் பொம்மெனப் புகுந்து
மொய்த்தார் 1

**இராமனைக் காணவந்த மகளிரின்தன்மை.**

கண்ணினாற் காத லென்னும் பொருளையே காண்கின்
றோமிப்
பெண்ணினீர் மையினா லெய்தும் பயனின்று பெறுது
மென்பார்
மண்ணினீ ருலந்து வான மழையறை வறந்த காலத்து
உண்ணுநீர் கண்டு வீழு முழைக்குலம் பலவு
மொத்தார் 2

பள்ளத்துப் பாயு தன்னீ ரனையவர் பானல் பூத்த
வெள்ளத்தும் பெரிய கண்ணார் மென்சிலம் பலம்ப
மென்பூத்

தள்ளத்தம் மிடைகணவேத் தமைவலித் தவன்பாற்
செல்லும்
உள்ளத்தைப் பிடித்து நாமென் றோடுகின் றுரு
மொத்தார். 3

இராமபிரானை மகளிர்நோக்கியதைப்பற்றிய கவிக்கூற்று.

பஞ்சணி விரலி னார்தம் படைநெடுங் கண்க ளெல்லாம்
செஞ்சவே யையன் மெய்யிற் கருமையைச் சேர்ந்த
வோதாம்
மஞ்சன மேனி யான்றன் மணிநிற மாத ரார்தம்
அஞ்சன நோக்கம் பார்க்க விருண்டதோ வறிகி
லேமால். 4

ஒருத்தியின் மன்மதோபாலம்பனம்.

மாந்தளிர் மேனி யாளோர் வாணுதன் மதன னெங்கும்
பூந்துணர் வாளி மாரி பொழிகின்ற பூசனைக்கி
வேந்தர்கோ னைனை நோக்கான் வீரன்வி லாண்மை
பாரான்
ஏந்திழை யாரை யெய்வான் யாவனோ வொருவ
னென்றாள். 5

இராமனைக் காணச்சென்ற மாதர்களின் நிலைமையைக்
கூறுவன.

சொன்னலங் கடந்த காமச் சுவையையோ ருருவ மாக்கி
இன்னலந் தெரிய வல்லா னெழுதிய தென்ன நின்றாள்
பொன்னையும் பொருவு நீராள் புனைந்தன வெல்லாம்
போக்கித்
தன்னையுந் தாங்க லாதாள் துகி லொன்றுந் தாங்கி
நின்றாள். 6

மைக்கருங் கூந்தல் செவ்வாய் வாணுத லொருத்தி
யுள்ளம்
நெக்கென வுருகு கின்றா ளெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன் போகா வண்ணங் கண்ணெனும் புலங்கொள்
வாயும்
சிக்கென வடைந்தேன் றோழி சேருது மமளி யென்றாள். 7

தாக்கணங் கனைய மேனி தைத்தவேள் சரங்கள் பாராள்
வீக்கிய கலையுந் தூசும் வேறுவே றான தோராள்

ஆக்கிய பாவை யன்னு ளொருத்தியாண் டமலன் மேனி
நோக்குறு வாரை யெல்லா மெரியெழ நோக்கு
கின்ருள். 8

## இராமனைக் கண்ட மாதர்
## தாம் கண்ட கண்ட உறுப்பிலேயே மனம்பதித்தமை.

தோள் கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமல
மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாரு
மஃதே
வாள் கொண்ட கண்ணர் யாரே வடிவினை முடியக்
கண்டார்
ஊழ்கொண்ட சமயத் தன்னு னுருவுகண் டாரை
யொத்தார். 9

## இராமனை ஒருத்தி உள்ளத்துக் கொண்டதைப்பற்றியது

தையல் சிற்றிடை யாளொரு தாழ்குழல்
உய்ய மற்றவ னுள்ளத் தொடுங்கினன்
வைய முற்றும் வயிற்றி னடக்கிய
ஐய னிற்பெரி யாரினி யாவரே. 10

அருப்பு மென்முலை யாளங்கொ யாயிழை
இருப்பு நெஞ்சினை யேனுமொ ரேழைக்காப்
பொருப்பு வில்லைப் பொடிசெய்த புண்ணியா
கருப்பு வில்லிறுத் தாட்கொண்டு காவென்ருள். 11

பழுதி லாவொரு பாவையன் னுள்பதைத்து
அழுது வெய்துயிர்த் தன்புடைத் தோழியைத்
தொழுது சோர்ந்தயர் வாளிந்தத் தோன்றலை
எழுத லாங்கொலிம் மன்மத னுலென்ருள். 12

வண்ண வாயொரு வாணுதன் மானிடற்கு
எண்ணுங் காலிவ் விலக்கண மெய்திட
ஒண்ணு மோவி துணர்த்துகின் றேனிவன்
கண்ண னேயிது கண்டிரும் பின்னென்ருள். 13

புனங்கொல் கார்மயில் போலுமொர் பொற்கொடி
மனங்கொள் காதன் மறைத்தலை யெண்ணினுள்
அனங்க வேள தறிந்தன னற்றந்தான்
மனங்கள் போல முகமு மறைக்குமே. 14

### ஒருத்தியின் இரக்கமொழி.

வேர்த்து மேனி தளர்ந்துயிர் விம்மலோடு
ஆர்த்தி யுற்ற மடந்தைய ராரையும்
தீர்த்த னித்தனை சிந்தையிற் செங்கணில்
பார்த்தி லானுட் பரிவில னோவென்றாள். 15

### ஒருத்தி இராமனைப் பழித்தல்.

மருண்ம யங்கு மடந்தையர் மாட்டொரு
பொருண யந்திலன் போகின்ற தேயிவன்
கருணை யென்பது கண்டறி யான்பெரும்
பருண தன்கொல் படுகொலை யானென்றாள். 16

பெருத்த காதலிற் பேதுறு மாதரின்
ஒருத்தி மற்றங் கொருத்தியை நோக்கியென்
கருத்து மவ்வழிக் கண்டதுண் டோவென்றாள்
அருத்தி யுற்றபி னாணமுண் டாகுமோ. 17

நங்கை யங்கொரு பொன்னயந் தாருயத்
தங்க ளின்னுயி ருங்கொடுத் தார்தமர்
எங்க ளின்னுயி ரெங்களுக் கீகலா
வெங்க ணைங்கன் விளைந்த திவற்கென்றாள். 18

### இராமபிரான் சபாமண்டபத்தைச் சேர்தல்.

மாத ரின்னண மொய்த்திட வள்ளல்போய்க்
கோதில் சிந்தை வசிட்டனுங் கோசிக
வேத பாரனு மேவிய மண்டபம்
ஏதி மன்னர் குழாத்தொடு மெய்தினான். 19

### முனிவர்களாசியுடன் இராமன் தம்பியரோடு ஆசனத்து அமர்தல்.

இறைஞ்ச வன்னவ ரேத்தின ரேவவோர்
நிறைஞ்ச பூத்தவி சேறி நிழற்கள் போல்
புறஞ்செய் தம்பிய ருட்போலிந் தானரோ
அறஞ்செய் காவற் கயோத்தியிற் றோன்றினான். 20

### தசரதசக்கரவர்த்தி அந்த மண்டபத்தைத் தமரோடுஞ் சார்தல்.

ஆன மாமணி மண்டப மன்னது
தானை மன்னன் றமரொடுஞ் சார்ந்தனன்

மீன லாந்தன பின்வர வெண்மதி
வானி லாவுற வந்தது மானவே. 21

சனகன் யாவரையும் உபசரித்த வகை.

ஒழிந்த வென்னினி யொண்ணுத ருதைதன்
பொழிந்த காத ருெடரப் பொருளெலாம்
அழிந்து வந்து கொண் டாடலி னன்புதான்
இழிந்து ளார்க்கு மிராமற்கு மொத்ததே. 22

## 20. கோலங்காண்படலம்

வசிட்டன் சீதையை யழைத்துவரச் சனகனிடம் கூறல்.

தேவியர் மருங்கு சூழ விந்திர னிருக்கை சேர்ந்த
ஓவிய முயிர்பெற் றென்ன வுவந்தர சிருந்த காலைத்
தாவில்வெண் கவிகைச் செங்கோற் சனகனை யினிது நோக்கி
மாவிய னேக்கி ஞளைக் கொணர்கென வசிட்டன் சொன்னுன். 1

தோழிமார் சீதையை யலங்கரிக்கலானமை.

அமிழிமைத் துணைகள் கண்ணுக் கணியென வமைக்கு மாபோல்
உமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப தோரார்
அமிழ்தினைச் சுவைசெய் தென்ன வழகினுக் கழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞால மேழைமை யுடைத்து மாதோ. 2

கழுத்துக்கு அணியணிதல்.

கோனணி சங்கம் வந்து குடியிருந் தனைய கண்டத்து
ஈனமில் கலன்க டம்மி லியைவன வணிதல் செய்தார்
மானணி நோக்கி ஞர்த மங்கலக் கழுத்துக் கெல்லாம்
தானணி யான போது தனக்கணி யாது மாதோ. 3

நெற்றியில் திலகமிடுதல்.

மொய்வளர் குவளை பூத்த முளரியின் முளைத்த முத்தாள்
மெய்வளர் மதியி ஞுப்பண் மீனுண்டே லனைய தேய்ப்ப
வையக மடந்தை மார்க்கும் நாகர்கோ தையர்க்கும் வானத்

தெய்வமங் கையர்க்கு மெல்லாந் திலதத்தைத் திலதஞ்
செய்தார். 4

### வண்ணமகளிர் சீதையினழகைக் கண்டு காமுறுதல்.

கஞ்சத்துக் களிக்கு மின்றேன் கவர்ந்துணும் வண்டு
போல
அஞ்சொற்கள் கிள்ளைக் கெல்லா மருளினு லழகை
மாந்தித்
தஞ்சொற்கள் குழறித் தத்தந் தகைதடு மாறி நின்ருர்
மஞ்சர்க்கு மாத ரார்க்கு மனமென்ப தொன்றே
யன்ரு. 5

இழைகுலா முலையி னுளை யிடையுவா மதியி னேக்கி
மழைகுலா வோதி நல்லார் களிமயக் குற்று நின்ருர்
உழைகுலா நயனத் தார்மாட் டொன்ருன்றே விரும்பற்
கொத்தது
அழகெலா மொருங்கே கண்டால் யாவரே யாற்ற
வல்லார். 6

### சீதையின் வருணனை.

சங்கங்கை யுடைமை யாலுந் தாமரைக் கோயி லாலும்
எங்கெங்கும் பரந்து வெவ்வே றுள்ளத்தி னெழுதிற்
றென்ன
அங்கங்கே தோன்ற லாலு மருத்ததி யனைய கற்பின்
நங்கையு நம்பி யொத்தா ளுமினிப் புகல்வ
தென்னே. 7

### சீதை நடந்துசெல்லுதற் சிறப்பு.

சிந்தொடு குறளுங் கூனுஞ் சிலதியர் குழாமுந் தெற்றி
வந்தடி வணங்கிச் சுற்ற மணியணி விதான நீழல்
இந்துவின் கொழுந்து விண்மீ னினத்தொடும் வருவ
தென்ன
நந்தலில் விளக்க மன்ன நங்கையு நடக்க லுற்ருள். 8

### சீதைசெல்லுதலின் வருணனை.

வல்லியை யுதிர்த்தநில மங்கையிவ்ள் பாதம்
மெல்லிய வுறைக்குமென வஞ்சிவெளி யெங்கும்
பல்லவ மலர்த்தொகை பரப்பின ளெனத்தன்
நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள். 9

### சீதை மண்டபத்தை யடைதல்.

பொன்னினொளி பூவின்வெறி சாந்து பொதி சீதம்
மின்னினிழ லன்னவடன் மேனியொளி மான
அன்னமு மரம்பையரு மாரமிர்து நாண
மன்னவை யிருந்தமணி மண்டப மடைந்தாள். 10

### ஆடவரும் மகளிரும் சீதையின் திருமேனியழகைக் கண்கொட்டாது காணுதல்.

சமைத்த வரை யின்மைமறை தானுமென லாமச்
சுமைத்திரண் முலைத்தெரிவை தூய்வடிவு கண்டார்
அமைத்திரள்கொ டோளியரு மாடவரு மெல்லாம்
இமைத்தில ருயிர்த்திலர்கள் சித்திர மெனத்தாம். 11

### இராமன் சீதாபிராட்டியைக் கண்டு களித்தல்.

அன்னவளை யல்லளென வாமென வயிர்ப்பான்
கன்னி யமிழ்தத்தை யெதிர்கண்ட கடல்வண்ணன்
உன்னுயிர் நிலைப்பதொ ரருத்தியொ டுழைத்தாண்டு
இன்னமிழ் தெழக்களிகொ ளிந்திரனை யொத்தான். 12

### வசிட்டமுனிவனது மகிழ்ச்சி.

எங்கள்செய் தவத்தினி னிராமனென வந்தான்
சங்கினொடு சக்கர முடைத்தனி முதற்பேர்
அங்கணர சாதலினவ் வல்லிமலர் புல்லும்
மங்கையிவ ளாமென வசிட்டன் மகிழ்வுற்றான். 13

### சீதையை மணாட்டுப் பெண்ணாகப் பெறுதற்குத் தசரதன் மகிழ்தல்.

துன்றுபுரி கோதையெழில் கண்டுலகு சூழ்வந்து
ஒன்றுபுரி கோலொடு தனித்திகிரி யுய்ப்பான்
என்றுமுல கேழுமர செய்தியுள னேனும்
இன்றுதிரு வெய்தியது வென்வயம தென்றான். 14

### வணங்கவேண்டியவரை வணங்கிச் சீதை தந்தையருகில் தங்குதல்.

மாதவனை முற்கொள வணங்கி நெடு மன்னன்
பாதமலர் கைதொழுது கண்கள்பனி சோரும்
தாதையரு கிட்டதவி சிற்றனி யிருந்தாள்
போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள். 15

### சீதையினழகுகண்ட விசுவாமித்திரனது வியப்புமொழி.

அச்சென நினைத்தமுத லந்தண னினைந்தான்
பச்சைமலை யொத்த படிவத்தட லிராமன்
நச்சுடை வடிக்கண் மலர் நங்கையிவ ளென்றால்
இச்சிலை கிடக்கமலை யேழையு மிருஞே. 16

### சீதை இராமனைக் கடைக்கண்ணாற்கண்டு ஐயம்நீங்குதல்.

எய்யவில் வளைத்தது மிறுத்தது முரைத்தும்
மெய்யவிளை விடத்து முதலையம் விடலுற்றாள்
ஐயனை யகத்து வடிவேயல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள். 17

### சீதை துயரம் நீங்கிப் பேரானந்தமடைதல்.

கணங்குழை கருத்திலுறை கள்வனென லானன்
வணங்குவி லிறுத்தவ னெனத்துயர் மறந்தாள்
அணங்குறு மவிஞ்சைகெட விஞ்சையி னகம்பாடு
உணர்ந்தறிவு முற்றுபய னுற்றவரையொத்தாள். 18

### ‘விவாகம் என்று?' எனக் கௌசிகனைத் தசரதன்வினவுதல்.

சொல்லுயர் களிற்றரசர் கோமக னிருத்தான்
கல்விகரை யுற்றமுனி கௌசிகனை மேலோய்
வல்லிபொரு சிற்றிடை மடந்தைமண நாளாம்
எல்லையி னளத்தபக லென்றுரைசெய் கென்றான். 19

### கௌசிகன் ‘திருமணம் நாளைக்கு' என்று மறுமொழி கூறுதல்.

வாளையுக ளக்கயல்கள் வாவுமதின் மேதி
மூளைமுது கைக்கிழிய மூரிய வரான்மீன்
பாளைவிரி யக்குதிகொள் பண்ணைவள நாடா
நாளையென வுற்றபக னற்றவ னுரைத்தான். 20

### தசரதன் தன் மாளிகை சேர்தல்.

சொற்றபொழு தத்தரசர் கைதொழு தெழத்தன்
ஒற்றைவையி ரச்சுரிகொள் சங்கினொலி பொங்கப்
பொற்றட முடிப்புது வெயிற்பொழி தரப்போய்
நற்றவ ரனுச்சைகொடு நன்மனை புகுந்தான். 21

### யாவரும் செல்லச் சூரியன் அத்தமித்தல்.

அன்னமரி திற்பிரிய வண்ணலு மகன்றப்
பொன்னிெ னாடு மாடவரை புக்கனன் மணிப்பூண்
மன்னவர் பிரிந்தனர்கள் மாதவர்கள் போனார்
மின்னுசுட ராதவனு மேருவின் மறைந்தான். 22

## 21. கடிமணப்படலம்

### சீதையின் நிலைமை.

தேடரு நலத்தபுன லாசைதெற லுற்றார்
மாடொர்தட முற்றதனை யெய்தும் வகைகாணார்
ஈடழி வுறத்தளர்வொ டேமுறுவ ரன்றே
ஆடக வளைக்குயிலு மந்நிலைய ளானாள். 1

### காமவேதனைகொண்ட பிராட்டி தன் மனத்திலே நினைத்தவற்றையுஞ் சொன்னவற்றையுங்கூறுதல்

உரவே துமிலாருயிரீர் துமெனக்
கரவே புரிவா ருளரோ கதிரோன்
வரவே யெனையா ளுடையான் வருமே
இரவே கொடியாய் விடியா யெனுமால். 2

மன்றல் குளிர்வா சம்வயங் கனல்வாய்
மின்றோத் துநிலா நகைவீழ் மலயக்
குன்றிற் குலமா ருழையிற் குடிவாழ்
தென்றற் புலியே யுயிர் தேடுதியோ. 3

தெருவே திரிவா ரொருசே வகனார்
இருபோ தும்விடா ரிதுவென் னைகொலாம்
கருமா முகில்போல் பவர்கன் னியர்பால்
வருவா ருளரோ குலமன் னவரே. 4

பண்ணோ வொழியா பகலோ புகுதாது
எண்ணோ தவிரா விரவோ விடியாது
உண்ணோ வொழியா ருயிரோ வகலா
கண்ணோ துயிலா விதுவோ கடனே. 5

இடையே வளைசோ ரவெழுந் துவிழுந்து
அடலேய் மதனன் சரமஞ் சினையோ
உடலோய் வுறநா ளுமுறங் கலையால்
கடலே யுறைநீ யுமொர்கன் னிகொலாம். 6

### பிராட்டி இங்ஙனம் வருந்துகையில் இராமன் நினைத்ததைச் சொல்வோமெனல்.

எனவின் னன்பன் னியிருந் துளைவாள்
துனியுன் னிநலங் கொடுசோர் வுறுகால்
மனைதன் னில்வயங் குறும்வை கிருள்வாய்
அனகன் னினைகின் றனயா மறைவாம். 7

### இராமன் மனத்து நினைவனவற்றைக் கூறுதல்

முன்கண் டுமுடிப் பருவேட் கையினுல்
என்கண் டுணைகொண் டிதயத் தெழுதிப்
பின்கண் டுமொர்பெண் கரைகண் டிலெனுல்
மின்கண் டவரெங் கறிவார் வினையே. 8

திருவே யனையாண் முகமே தெரியின்
கருவே கனியே விளைகா மவிதைக்கு
எருவே மதியே யிதுவென் செய்தவா
ஒருவே னுடுநீ யுறவா கலையோ. 9

தன்னைக் கெரிகா றகைவா ளரவின்
பன்னைக் கினதென் பதுபண் டுகொலாம்
என்னைக் கினுநெஞ் சினுமென் றுமுளார்
மென்னைக் கினதே கடுவல் விடமே. 10

### நாளை திருமணமென்று முரசு அறையுமாறு சனகன் கட்டளையிடுதல்.

வானவர் பெருமானும் மனநினை வினனுகத்
தேனகு குழலாடன் றிருமண வினைநாளைப்
பூநகு மணிவாசம் புனைநக ரணிவீரென்று
ஆனையின் மிசை யானை யணிமுர சறைவித்தான். 11

### சூரியோதய வருணனை.

அஞ்சன வொளியானு மலர்மிசை யுறைவாளும்
எஞ்சலின் மணநாளைப் புணர்குவ ரெனலோடும்
செஞ்சுட ரிருள் சீறித் தினகர னொருதேர்மேன்
மஞ்சனை யணிகோலங் காணிய வெனவந்தான். 12

### அந்நகரத்தவரின் செய்கை

தோரண நடுவாருந் தூணுறை பொதிவாரும்
பூரண குடமெங்கும் புனைதுகில் புனைவாரும்
காரணி நெடுமாடங் கதிர்மணி யணிவாரும்
ஆரண மறைவாணர்க் கின்னமு தடுவாரும். 13

மந்தர மணிமாட முன்றிலின் வயினெங்கும்
அந்தமி லொளிர்முத்தி னகனிரை யொளிவீச
இந்திர னெடுவானம் மீனலர் குவதென்னப்
பந்தரி னிழல்வீசப் படர்வெயில் கடிவாரும். 14

கலவைகள் புனைவாருங் கலைநல தெரிவாரும்
மலர்குழன் மலைவாரும் மதிமுக மணியாடித்
திலதமு மிடுவாருஞ் சிகழிகை யணிவாரும்
இலவிதழ் பொலிகோல மெழில்பெற விடுவாரும். 15

கதிர்மணி யொளிகாலக் கவர்பொரு டெரியாவாறு
எதிர்சுடர் தரமின்னுற் றெழுதலி னிமையோரும்
மதுவிரி குழலாரும் மதிலுடை நெடுவானம்
அதுவிது வெனவோரா தலமரலு றுவாரும். 16

தசரதன் கலியாணமண்டபத்தை யடைதல்.

கரைதெரி வரியது கனகம் வேய்ந்தது
வரையென வுயர்ந்தது மணியிற் செய்தது
நிரைவளை மணவினை நிரப்பு மண்டபம்
அரசர்த மரசனு மணுகன் மேயினன். 17

எண்டவ முனிவரு மிறைவர் யாவரும்
அண்டரும் பிறரும்புக் கடங்கிற் றுதலின்
மண்டபம் வையமும் வானும் வாய்மடுத்து
உண்டவன் மணியணி யுதர மொத்ததே. 18

என்றுநான் முகன்முதல் யாரும் யாவையும்
நின்றபே ரிருளினை நீக்கி நீணெறி
சென்றுமீ ளாக்குறி சேரச் சேர்த்திடு
தன்றிரு நாமத்தைத் தானும் சாத்தியே. 19

ஏதமி லிருகுழை யிரவு நன்பகற்
காதல்கண் டுணர்ந்தன கதிருந் திங்களும்
சீதைதன் கருத்தினைச் செவியி னுள்ளுறத்
தூதுவந் துரைப்பன போன்று தோன்றவே. 20

நணுகவு நிமிரவு நடக்கு ஞானத்தர்
உணர்வினி னொளிதிக ழுத்த ரீயந்தான்
தணிவருங் கருணைதன் கழுத்திற் சாத்திய
மணியுமிழ் கதிரென மார்பிற் றேன்றவே. 21

மேவருஞ் சுடரென விளங்கு மார்பினால்
ஏவருந் தெரிந்தினி துணர்மி னீண்டெனத்

தேவரு முனிவருந் தெரிக்க லாமுதல்
மூவருந் தானென முடித்த தொத்ததே. 22

இன்னண மொளிர்தர விமைய வர்க்கெல்லாம்
தன்னையே யனையதோர் கோலந் தாங்கினன்
பன்னக மணிவிளக் கழலும் பாயலுள்
அன்னவர் தவத்தினு லனந்த னீங்கினன். 23

### இராமபிரான் தானஞ்செய்துவிட்டுத் தேர்மீது ஏறுதல்.

பல்பதி னுயிரம் பசுவும் பைம்பொனும்
எல்லையி னிலனெடு மணிகள் யாவையும்
நல்லவர்க் குதவினு னவிலு நான்மறைச்
செல்வர்கள் வழுத்துறத் தேர்வந் தேறினன். 24

### பரதன் தேரோட்டவும் இலக்குமணசத்துருக்கனர் சாமரை வீசவும் இராமன் தேரிற் சென்றமை.

அனையதோர் தேரினி லருண னின்றெனப்
பணிவரு மலர்க்கணப் பரதன் கோல்கொளக்
குனிசிலைத் தம்பிபின் கூட வேனையன்
இனியபொற் கவரிகா லியக்க வேகினன் 25

### இராமன் மண்டபத்தைச் சார்தல்.

எஞ்சலி னுலகத் துள்ள வெறிபடை யரச வெள்ளம்
குஞ்சரக் குழாத்திற் சுற்றக் கொற்றவ னிருந்த கூடம்
வெஞ்சினத் தனுவ லானு மேருமால் வரையிற் சேருஞ்
செஞ்சுடர்க் கடவுளென்னத் தேரிடைச் சென்று
சேர்ந்தான். 26

சிலையுடைக் கயல்வாட் டிங்க ளேந்தியோர் செம்பொற்
கொம்பர்
முலையிடை முகிழ்ப்பத் தேர்மேன் முன்றிசை முளைத்த
தன்னுள்
அலைகடற் பிறந்து பின்னை யவனியிற் றோன்றி மீள
மலையிடை யுதிக்கின் றுள்போன் மண்டப மதனில்
வந்தாள். 27

### விவாகச் சடங்குக்கு உரியஉபகரணங்களைக்கொண்டு வசிட்டன் அந்தணருடன் வருதல்.

நீந்தருங் கடலென நிறைந்த வேதியர்
தோய்ந்தநூன் மார்பினர் சுற்றத் தொன்னெறி

வாய்ந்தநல் வேள்விக்கு வசிட்டன் மையற
எய்ந்தன கலப்பையோ டினிதி னெய்தினன். 28

### சீதையும் இராமனும் மணத்தவிசில் ஏறியிருத்தல்.

மன்றலின் வந்து மணத்தவி சேறி
வென்றி நெடுந்தகை வீரனு மார்வந்து
இன்றுணை யன்னமு மெய்தி யிருந்தார்
ஒன்றிய போகமும் யோகமு மொத்தார். 29

### சனகன் இராமனுக்குச் சீதையைத் தாரைவார்த்துக் கொடுத்தல்.

கோமகன் முன்சன கன்குளிர் நன்னீர்
பூமக ளும்பொரு ளும்மென நீயென்
மாமக டன்னொடு மன்னுதி யென்னாத்
தாமரை யன்ன தடக்கையி னீந்தான். 30

### சீதை தீவலம்வந்தபின் அம்மி மிதித்து அருந்ததி காணுதல்.

வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம்புரி நூலவர் செய்பொருண் முற்றி
இலங்கொளி யம்மி மிதித்தெதிர் நின்ற
கலங்கலில் கற்பி னருந்ததி கண்டாள். 31

### இராமன் பெரியோரை வணங்கிச் சீதையோடு தன்மாளிகை புகுதல்.

மற்றுள செய்வன செய்து மகிழ்ந்தார்
முற்றிய மாதவர் தாள்முறை சூடிக்
கொற்றவ னைக்கழல் கும்பிட லோடும்
பொற்றொடி கைக்கொடு நன்மனை புக்கான். 32

### இராமனும் சீதையும் கைகேயி முதலிய மூவரையும் வணங்குதல்.

கேகய மாமகள் கேழ்கிளர் பாதந்
தாயினு மன்பொடு தாழ்ந்து வணங்கா
ஆயத னன்னை யடித்துணை சூடித்
தூய சுமித்திரை தாடொழ லோடும். 33

### பங்குனியுத்தரத்தில் சீதாவிவாகம் வசிட்டனால் நடத்தல்.

பங்குனி யுத்தர மான பகற்போது
அங்க ணிருக்கினி லாயிர நாமச்

திங்க மணத்தொழில் செய்த திறத்தான்
மங்கல வங்கி வசிட்டன் வளர்த்தான். 34

இராமனுடைய தம்பிமாரும் ஊர்மிளை முதலியோர்களை
மணஞ்செய்து கொள்ளுமாறு ஜநகராசன் ஏற்பாடுசெய்தல்.

வள்ள றனக்கிளை யோர்க டமக்கும்
எள்ளலில் கொற்றவ னெம்பி யளித்த
அள்ளன் மலர்த்திரு வன்னவர் தம்மைக்
கொள்ளு மெனத்தம ரோடு குறித்தான். 35

தசரதன் சிலநாள் வசிட்டர் முதலியவரோடு தங்கியபின்
நிகழ்ந்ததை சொல்வோமெனல்.

ஏந்தள வில்லதொ ரின்ப நுகர்ந்தான்
ஆய்ந்துணர் கேள்வி யருந்தவ ரோடும்
வேந்தனு மந்தகர் வைகினன் மெள்ளத்
தேய்ந்தன நாள்சில செய்த துரைப்பாம். 36

## 22. பரசுராமப்படலம்

இராமபிரானும் சீதையும் அங்குப்போகம் நுகர,
விசுவாமித்திரன் தவஞ்செய்யச் செல்லுதல்.

தானுவதொர் வகையேநனி சனகன் றரு தையலும்
நானுவித முறுபோகமு நுகர்கின்றவந் நாள்வாய்
ஆனுமறை நெறியாசிகள் முனிகோசிக னருளிப்
போனுன்வட திசைவாயுயர் பொன்மால்வரை
புக்கான் 1

தசரதசக்கரவர்த்தி ஊர்க்கு மீண்டு செல்லுமாறு
யாவருடனும் பிரயாணமாதல்.

அப்போதினின் முடிமன்னவ னணிமாநகர் செலவே
இப்போதுந மனிகந்துணை யெழுகென்றினி திசையாக்
கைப்போதக நிகர்காவலர் குழுவந்தடி கதுவ
ஒப்போதரு தேர்மீதினி லினிதேறின னுரவோன். 2

தசரதன் அபசகுன மாவது கண்டு வழியிடை நிற்றல்.

ஏகும்மள வையின் வந்தன வலமும்மயி லிடமும்
காகம்முத லியமுந்திய தடைசெய்வன கண்டான்
நாகம்மன னிடையிங்குள திடையூறென நடவான்
மாகம்மணி யணிதேரொடு நின்றுனெறி வந்தான். 3

## சக்கரவர்த்தி ஓர் நிமித்திகனை வினவ, அவன் இடையூறுவந்து கழியுமெனல்.

நின்றேனெறி யுணர்வானொரு நினைவாளனை யழையா
நன்றோபழு துளதோ நடு வுரை நீநய மென்னக்
குன்றேபுரை தோளானெதிர் புள்ளின்குறி கொள்வான்
இன்றேவரு மிடையூ றது நன்றாய்விடு மென்றான். 4

## பரசுராமன்வருகை தெரிவிக்கும்.

என்னும்மன வினில்வானக மிருள்கீறிட வொளியாய்
மின்னும்படி புடைவீசிய சடையான் மழுவுடையான்
பொன்னின்மலை வருகின்றது போல்வானனல் கால்வான்
உன்னுந்தழல் வுழியானிரு மதிர்கின்றதொ
ருரையான். 5

கம்பித்தலை யெறிநீருறு கலமொத்துல குலையத்
தம்பித்துயர் திசையானைக டளரக்கடல் சலியா
வெம்பித்திரி தரவானவர் வெருவுற்றிரி தரவோர்
செம்பொற்சிலை தெறியாவயின் முகவாளிக டெரிவான். 6

சையம்புக நிமிரக்கட றழுவும்படி சமைவான்
மையின்னுயர் மலைநூறிய மழுவாளவன் வந்தான்
ஐயன்றனை யரிதிற்றரு மரசன்னது கண்டான்
வெய்யன்வர நிபமென்னைகொ லெனவெய்துறு
மெல்லை. 7

## பரசுராமன் 'உன்தோள்வலியைச்சோதிக்க வந்தேன்' எனல்.

இற்றோடிய சிலையின்றிற மறிவென்னினி யானுன்
பொற்றோள்வலி நிலைசோதனை புரிவானசை யுடையேன்
செற்றோடிய திரடோளுறு தினவுஞ்சிறி துடையேன்
மற்றோர்பொரு ளிலதிங்கிதென் வரவென்றன
னுரவோன். 8

## இராமன்மீதுசினங்கொண்டு அழியாது விட்டிடப் பலபடியாகத் தசரதன் வேண்டுதல்.

விளிவார்விளி வதுதீவினை விழைவாருழை யன்றோ
களியாலிவ னயர்கின்ற வுளவோகன லுமிழும்
ஒளிவாய்மழு வுடையாய்பொர வுரியாரிடை யல்லால்
எளியாரிடை வலியார்வலி யென்னாகுவ தென்றான்.

சலத்தோடியை விலனென்மக னனையானுயிர் தபுமேல்
உலத்தோடெதிர் தோளாயென துறவோடுயி
ருகுவேன்
நிலத்தோடுயர் கதிவானுற நெடியாயுன தடியேன்
குலத்தோடற முடியேலிது குறைகொண்டனெ
னென்றான் 10

### தன் வேண்டுகோளைச் சொருட்படுத்தாது இராமனிடத்து பரசுராமன் செல்லக்கண்டு தசரதன் மூர்ச்சித்தல்

என்னாவடி விழுவானையு மிகழாவெரி விழியாப்
பொன்னார் கலையணிவானெதிர் புகுவானிலை யுணராத்
தன்னாலொரு செயலின்மையை நினையாவுயிர் தளரா
மின்னாலயர் வுறும்வாளர வெனவெய்துற லுற்றான். 11

### இராமனைக் கிட்டிய பரசுராமன் சிவதநுசின் வரலாற்றைக் கூறல்.

மானம்முடை குடிமன்னவன் மதி சோர்வுறன் மதியான்
தானந்நிலை யுறுவானுறு வினையுண்டது தவிரான்
ஆனம்முடை யுமையண்ணலை யந்நாளுறு சிலைதான்
ஊனம்முள ததன் மேனிலை கேணீயென
வுரைப்பான் 12

உலகெலா முனிவற் கீந்தே னுறுபகை யொடுக்கிப்
போந்தேன்
அலகின்மா தவங்கள் செய்தோ ரருவரை யிருந்தே
னாண்டைச்
சிலையைநீ யிறுத்த வோசை செவியுறச் சீவி வந்தேன்
மலைகுவென் வல்லை யாயின் வாங்குதி தனுவை
யென்றான். 13

### ஸ்ரீராமன் 'வில்லைத்தருக' என்று வாங்கிவளைத்துப் பரசுராமனை நோக்கிச் சொல்லுதல்

என்றன னென்ன நின்ற விராமனு முறுவ லெய்தி
நன்றொளிர் முகத்த னாகி நாரணன் வலியி னாண்ட
வென்றிவிற் றருக வென்னக் கொடுத்தனன் வீரன்
கொண்டான்
துன்றிருஞ் சடையோ னஞ்சத் தோளுற வாங்கிச்
சொல்லும். 14

### ஸ்ரீராமன் 'இவ்வில்லிற்கு இலக்கு ஆவது யாது?' என்று வினவுதல்.

பூதலத் தரசை யெல்லாம் பொன்றுவித் தலையென்
றூலும்
வேதவித் தாய மேலோன் மைந்தனீ விரதம் பூண்டாய்
ஆதலிற் கொல்ல லாகா தம்பிது பிழைப்ப தன்றால்
யாதிதற் கிலக்க மாவ தியம்புதி விரைவி னென்றான். 15

### பரசுராமனது தவவலிமை இராமன் வளைத்தவில்லின் அம்புக்கு இலக்காகுதல்.

எய்தவம் பிடைபழு தெய்தி டாமலென்
செய்தவ மியாவையுஞ் சிதைக்க வேயெனக்
கையவ ணெகிழ்தலும் கணையுஞ் சென்றவன்
மையறு தவமெலாம் வாரி மீண்டதே. 16

### ஸ்ரீராமன் தசரதனைச்சார்ந்து தொழுது துயர்நீங்கச்செய்தல்.

அழிந்தவன் போனபி னமல னையுணர்வு
ஒழிந்துதன் னுயிருலைந் துருவ தாதையைப்
பொழிந்தபே ரன்பினாற் றொழுது முன்புபுக்கு
இழிந்தவான் றுயர்க்கடற் கரைநின் றேற்றினான். 17

### ஸ்ரீராமன் விஷ்ணுவில்லை வருணதேவன்கையிற் கொடுத்திட்டுச் சேனை முதலியவற்றோடு அயோத்தி சேர்தல்.

பூமழை பொழிந்தனர் புகுந்த தேவருள்
வாமவேல் வருணனை மான வெஞ்சிலை
சேமியென் றுதவித்தன் சேனை யார்த்தெழ
நாமநீ ரயோத்திமா நகர நண்ணினான். 18

ஆணை நினதுமூ தாதை யையநிற்
காணிய விழைவதோர் கருத்த னுதலால்
கேணியில் வளைமுரல் கேக யம்புகப்
பூணொளிர் மார்பநீ போதி யென்றனன். 19

### மேற்காண்டத்துக்குத் தோற்றுவாய்.

ஆனவன் போனபின் னரசர் கோமகன்
ஊனமில் பேரர சுய்க்குநா ளிடை
வானவர் செய்தமா தவமுண் டாதலான்
மேன்னி நிகழ்ந்தன விளம்பு வாமரோ. 20

கம்பராமாயணம்
பாலகாண்டம்
முற்றிற்று.